யமுனையாறு இடையறாத பகவத் ஸம்பந்தத்தை யுடையதாயிருந்ததுபோல, வேதமும் பகவத் ஸம்பந்தத்தை நியதமாக வுடையதாயிருக்கையாலே வேதத்தை யமுனையாற்றின் ஸ்தானத்தில் கொள்வது பொருந்தும். குதர்க்கவாதிகளைக் காளியன் ஸ்தானத்தில் கொள்வதற்கான பொருத்தம் இனி உபபாதிக்கப்படுகிறது.

காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சை உமிழ்ந்து நாசத்தை விளைத்தானென்று புராணங் கூறும். அப்படியே குதர்க்கவாதிகளும் ஐந்து விதமான துர்வாதங்களாலே பரமார்த்த நாசத்தை விளைவிக்கின்றார்கள்; எங்ஙனே யென்னில்: (1) ஈச்வரனென்று ஒருவனைக் கொள்வது கூடாது; ஈச்வரனேயில்லை—என்பது ஒரு குத்ஸிதவாதம். (2) ஈச்வரனுளனென்று இசைந் தாலும் அவன் அநுமாநத்தினால் ஸித்திப்பவனேயன்றி சாஸ்திரத்தினால் ஸித்திப்பவனல்லன் என்பது மற்றொரு குத்ஸிதவாதம். (3) சாஸ்திரங்களைக் கொண்டே ஈச்வரனை அங்கீகரித்தும் அவனுக்குக் குணங்களும் விக்ரஹமும் விபூதியும் இல்லையென்பது வேறொரு குத்ஸிதவாதம். (4) ஈச்வரன் ஒருவனே யென்பதில்லை. பலபல ஈச்வரர்களுளரென்று பல தெய்வங்களுக்கு ஈச்வரத்வம் காட்டி வாதித்தல் இன்னுமொரு குத்ஸிதவாதம் (5) பிரபஞ்சமே கிடையாது, எல்லாம் சூனியம் என்று ஸர்வ சூன்யவாதம் பண்ணுகை ஸர்வோத்துங்கமான குத்ஸிதவாதம். ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்த வாதங்களினால் வேதத்தைக் கெடுத்த குதர்க்க வாதிகள் காளிய ஸ்தானத்திலே கொள்ளப்படுவது பொருந்தும். இக்கெடுதல்களையெல்லாம் நம் ஆசார்ய ஸார்வபௌமர் அநேக ஸதர்த்த நிரூபணங்களினாலே போக்கியருளினர். இங்கே மற்றொரு விசேஷமும் காணலாம். "வாய்த்த காளியன்மேல் நடமாடிய கூத்தனார்" என்று சூடிக்கொடுத்தசுடர்க்கொடி பணித்தபடி காளியன்தலையிலே கண்ணபிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப்போல, ஸ்வாமி யெம்பெருமானாருடைய ஸம்பந்த ஸம்பந்தமுடைய நாம் "நாவலிட்டு உழிதருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே" என்று தொண்டரடிப்பொடியாழ்வாரருளிச் செய்த கணக்கிலே யமகிங்கரர்களின் தலையிலே அடியிட்டுக் கூத்தாடப் பெறுவோம். "ததங்யமத துர்மதஜ்வலிதசேதஸாம் வாதிநாம் சிரஸ்ஸு நிஹிதம் மயா பத மதக்ஷிணம் லக்ஷ்யதாம்" என்ற யதிராஜஸப்ததிஸூக்திப்படியும் காளியஸமர்களின் தலைமேல் நடனம் செய்வோம். ஸத்யமாக தேசிகன் திருவுள்ளத்திலுறைந்த அர்த்தங்களையே இங்கு நாம் விவரித்தோம். இவ்வர்த்தங் களை தீக்ஷிதர் வியாக்கியானிக்க ப்ரஸக்தியேது? காளிய ஸ்தானத்திலே நிற்பவரன்றோ அவர். தமிழுரையாசிரியர் ஸ்ரீவைஷ்ணவபண்டிதராயிருந்து இப்பொருள்களை லவலேசமும் காட்டா மல், (யமுநா) என்பதற்கு (வேதமூர்த்தியான ஸூர்யனின் பெண்ணான யமுனையானது என்று உரையெழுதி வெகு விசேஷார்த்தம் ஸாதித்துவிட்டதாக அபிமானிக்கிறார். மேலுள்ள இரண்டு வரிகளும் பொருளற்றவையே. ... ... ... ...

5. *முதல்ஸர்க்கத்தின் முடிவு சுலோகம்*

"ஆச்வாஸ்ய வாகம்ருதவ்ருஷ்டிபிராதிதேயான் தைதேயபாரநமிதாம் தரணிஞ்ச தேவீம்,
ஆவிர்ப்புபூஷுரநகோ வஸுதேவபத்ந்யாம் பத்மாபதி: ப்ரணிததே ஸமயம் தயாயா:"

என்பதாம். தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி எம்பெருமான் தேவகிப் பிராட்டியாரிடம் திருவவதாரம் செய்து தனது திருவருளைப் பிரகாசிப்பிக்கத் திருவுள்ளம் பற்றினபடியைச் சொல்லுவது இந்த சுலோகம். இதில் உத்தரார்த்தத்தில் (*ஆவிர்புபூஷு*:) என்றவுடனே (அநக:) என்றொரு விசேஷணமுள்ளது. தோஷமற்றவன் என்பது இதன் பொருள். அகில ஹேயப்ரத்யநீகனென்றபடி. எம்பெருமானுக்கு தோஷமில்லாமையை அந்தந்த பிரகரணங்

களுக்குத் தக்கபடி உபபாதிக்க வேண்டும். ப்ரக்ருதத்தில், *ஆவிர்புபூஷு:*—அவதரிக்கத் திருவுள்ளம் பற்றினன் என்று சொல்லி, உடனே *அநக:*—அவத்யமில்லாதவன் என்றமையால், அஸ்மதாதிகளின் பிறப்புக்கு நல்வினை தீவினைகளாகிற கருமம்காரணமாகிறாப் போலே பகவானுடைய அவதாரத்திற்கும் கருமம் காரணமாகிறதோவென்று சங்கிக்க நேருமன்றோ. அவ்விதமான பிறப்பாகில் அது அவத்யமேயாகுமன்றோ. பகவான் கருமம் காரணமாக வன்றிக்கே கேவலம் கருணையே காரணமாக அவதரிக்கின்றானாகையாலே அத்தகைய அவத்யத்திற்கு அவகாசமில்லையென்பது இங்கு விவக்ஷிதம். அலங்கார சாஸ்த்ரத்தில் *பரிகர* மென்று ஓர் அலங்காரம் சொல்லிற்று. ☼அலங்கார: பரிகர: ஸாபிப்ராயே விசேஷணே☼ என்று அதன் லக்ஷணமும் சொல்லிற்று. ஒருகருத்தோடு விசேஷணமிட்டால் அங்கு பரிகராலங்கார மென்றபடி. இவ்வலங்காரமே ஆசிரியரால் இங்கு உத்தேசிக்கப்பட்டது. அதை ஆசிரியர் தாமே நான்காவது பாதத்தினல் [☼பத்மாபதி: ப்ரணிததே ஸமயம் தயாயா:☼என்பதனல்] விளக்கியருளினர். ஆக *அநக:* என்பதற்கு—கர்மவச்யனாகிப் பிறவாதவனாகையாலே கர்மவச்யத்வமாகிற தோஷமில்லாதவன் என்பதே இங்கு ஆசிரியர் திருவுள்ளம் பற்றின பொருளாகும்.

வியாக்கியான சர்த்தாவான அப்பயதீக்ஷிதர் இங்கு *அநக:*—நிரவத்ய:; தத்தத் கர்மாநுரோதிதயா வைஷம்யநைர்க்ருண்ய தோஷரஹித:-'' என்றெழுதியுள்ளார். அவரவர்கள் செய்யும் புண்யபாபரூப கருமங்களையொட்டிப் பலன் கொடுப்பவனாகையாலே வைஷம்யநைர்க்ருண்யமாகிற தோஷமில்லாதவன்—என்பது இந்த வாக்கியத்தின் பொருள். பகவான் உலகங்களைப் படைக்குங்காலத்திலே இப்படிப்பட்ட தோஷசங்கையும் தத்பரிஹாரமும் சாரீரகமீமாம்ஸையில் ''*வைஷம்யநைர்க்ருண்யே நஸாபேக்ஷத்வாத்*'' என்கிற ஸூத்ரத்திலேறியுள்ளது. பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதகத்தில்—☼நிம்நோந்நதஞ்ச கருணஞ்ச ஜகத் விசித்ரம் கர்ம வ்யபேக்ஷ்ய ஸ்ருஜதஸ் தவ ரங்கசேஷிந்!, வைஷம்யநிர்க்ருணதயோர் ந கலு ப்ரஸக்தி: தத் ப்ரஹ்மஸூத்ரஸசிவா: க்ருதயோ க்ருணந்தி.☼ என்கிறச்லோகத்தினல் இதனை விசதீகரித்தருளினர். அங்கு அதற்குமுன் சுலோகத்தில் (☼அசிதவிசேஷிதாந் ப்ரலயஸீமநி ஸம்ஸரத:☼ இத்யாதியில்) ஸ்ருஷ்டிப்ரஸ்தாவம் உள்ளபடியினல் அடுத்த சுலோகம் அங்ஙனே அமையவேண்டியதாயிற்று. இங்கு ஸ்ருஷ்டிப்ரஸ்தாவமில்லை, அவதாரப்ரஸ்தாவமேயுள்ளது. இதற்குச் சேர 'கர்மவச்யத்வமாகிற தோஷமற்றவன் என்னும்' பொருளே பொருந்தும். மற்றுமிப்புடையிலே வேறுவகையானபொருளும் பகரலாமேயல்லது வைஷம்யநைர்க்ருண்ய தோஷமற்றவன் என்னும் பொருள் ஸர்வாத்மநா இங்கு அப்ரஸக்தம்

அடியேனெழுதி வெளியிட்டுள்ள தன் சரிதையில் பக்கம் 141ல்
இதுபற்றிய இதிஹாஸமொன்றுள்ளது. அது வருமாறு:—

ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீமத் புத்தங்கோட்டம் சேமாச்சார்ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான ஜ்ஞாநாநுஷ்டான சீலர் எழுந்தருளியிருந்தார். அந்த ஸ்வாமி அஹோபில மடத்து ஆஸ்தான வித்வானென்றும் விளங்கி வந்தார். அந்த ஸ்வாமியின் பரிசயம் அடியேனுக்கு அதற்கு முன்பு கிடையாது. அடியேன் காவேரிக்காகச் சென்றுகொண்டிருக்கையில் அந்த ஸ்வாமி ஒரு திருமாளிகை வாசல் திண்ணையில் எழுந்தருளியிருந்து சிலர்க்கு யாதவாப்யுதயபாடம் ஸாதித்து வருகிருர். வீதியூடே சென்றுகொண்டிருந்த வடியேனைப் பரமப்ரேமத்துடன் கடாக்ஷித்து அழைத்துக் குசலப்ரச்நம்பண்ணி உட்காரச்செய்தார். பிறகு பாடம் நடந்துகொண்டிருக்கிறது. அதில் முதல் ஸர்க்க முடிவில்

''ஆச்வாஸ்ய வாகமருதவ்ருஷ்டிபிராதிதேயாந் தைதேயபாரநமிதாம் தரணீஞ்ச தேவீம்,
ஆவிர்புபூஷுரநகோ வஸுதேவபத்ந்யாம் பத்மாபதி: ப்ரணிததே ஸமயம் தயாயா:''
என்கிற இந்த சுலோகம் ப்ரவசன மாகிறது.

பூபாரத்தையும் அஸுரோபத்ரவத்தையும் நீக்கும்படி பூமிதேவியாலும் தேவதைகளாலும் பிரார்த்திக்கப்பட்ட க்ஷீராப்திநாதன் அவர்களைத் தேற்றியனுப்பிய தான் தேவகிப் பிராட்டியாரிடம்பிறந்து தனது தயையை வெளிப்படுத்த உத்தேசித்தான்—என்பது இந்த ச்லோகத்தின் தாற்பரியம். இதில் [அநக:] என்னும் விசேஷணம் பகவானுக்குள்ளது. அகில ஹேயப்ரத்ய நீகனென்று வேதாந்தங்கள் போற்றநின்ற பெருமானுக்கு இல்லையாகச் சொல்லப்படுகிற அவத்யம் எதுவென்று சங்கைவரக்கூடும். இதன் வியாக்கியானத்தில் அப்பயதீக்ஷிதர் "அநக.—அநவத்ய:, தத்தத் கர்மாநுரோதிதயா வைஷம்ய நைர்க்ருண்ய ரஹித;" என்றெழுதியுள்ளார்: அவரவர்கள் செய்யும் புண்யபாபரூப கருமங்களைப் பின்செல்பவனுதலால் வைஷம்ய நைர்க்ருண்யங்களாகிற தோஷங்களில்லாதவன்—என்பது இந்த வியாக்கியான வாக்கியத்தின் பொருள். பகவான் ஜகத்ஸ்ருஷ்டி பண்ணுகிற காலத்திலே இப்படிப்பட்ட தோஷங்களுக்கு சங்கையும் பரிஹாரமும் சாரீரகமீமாம்ஸையில் ஏற்பட்டிருப்பது வாஸ்தவம். பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் "நிம்நோந்நதஞ்ச கருணஞ்ச ஜகத் விசித்ரம் கர்ம வ்யபேக்ஷ்ய ஸ்ருஜதஸ் தவ ரங்கசேஷிந், வைஷம்யநிர்க்ருணதயோர் ந கலு ப்ரஸக்தி: தத் ப்ரஹ்மஸூத்ரஸசிவாச் ச்ருதயோ க்ருணந்தி" என்கிற ச்லோகத்திலுல் இதனை விசதீகரித்தருளினார். ப்ரக்ருதே ஜகத்ஸ்ருஷ்டியைச் சொல்லுகிற ப்ரகரணமாக இருந்தால் இங்ஙனே பொருள் பணிக்கத் தக்கதாகும். இது அந்த ப்ரகரணமன்று; பகவான் தன்னுடைய திருவவதார ப்ரகரணமென்பது ஸ்பஷ்டம். இந்த ப்ரகரணத்தில் (அநக:) என்பதற்கு வைஷம்ய நைர்க்ருண்ய தோஷமில்லாதவன் என்று பொருள் கூறுவது ஏலாது. இவ்விஷயத்தை அந்த புத்தங்கோட்டம்ஸ்வாமி விமர்சியாமல் வியாக்கியானத்திலுள்ள படியே பாடம் சொல்லிக்கொண்டிருந்தார்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த அடியேன் "இங்கே ஒரு விவக்ஷையுண்டு, விஜ்ஞாபிக்கலாமோ?" என்று கூறி; அவ்விடத்து வியாக்கியான பங்க்தி பொருந்தாதென்பதை விஜ்ஞாபித்தேன். பரிகராலங்காரம் அமைய அருளிச்செய்யப்பட்ட (அநக:) என்னும் விசேஷணத்திற்கு வைஷயம்யநைர்க்ருண்ய தோஷமில்லாதவனென்கிற பொருள் அப்ரஸக்தமென்று உபபாதித்தேன். அப்பய தீக்ஷிதர் எவ்வளவு வியாபகர்; அவருடைய வியாக்கியானத்திற்கா குற்றங்குறை கூறுகின்றீர்; (அநக:) என்பதற்கு வேறு எவ்விதமாக அர்த்தம் சொல்ல முடியும்; நீர் சொல்லும் பார்ப்போம்" என்றார். "அஸ்மதாதிகளுடைய பிறப்புக்குக் கர்மம் காரணம்; கர்மவச்யத்வமாகிற தோஷம் நமக்குண்டு; எம்பெருமான் க்ருபாவச்யனுகிப் பிறக்கிறானேயொழியக் கர்மவச்யனுகிப் பிறப்பதில்லை. ஆகவே கர்மவச்யத்வமாகிற தோஷமில்லாதவன் என்பதே இந்தப் பொருந்தமான பொருள்; இந்த ரீதியில் மற்றும் சில பொருள்களும் சொல்லலாம்; தீக்ஷிதர் எழுதியுள்ள பொருள் இவ்விடத்திற்குப் பொருந்தாதுதான்" என்று அரைமணிகாலம் விவரித்து விண்ணப்பம் செய்தேன். அதன்மேல் அந்த ஸ்வாமி சீற்றத்தோடு சில வார்த்தைகள் ஸாதிக்க 'சேஷம் கோபேந பூரயேத் என்பது தெரிந்ததுதானே" என்றேன்.

அதைக்கேட்டவுடனே அவர்க்கு இன்னமும் அளவுகடந்த சீற்றமுண்டாகிவிட்டது அந்தோ! வைரஸ்யமதிகரித்துவிட்டதே யென்று உடனே அடியேன் அகன்றுவிட்டேன். அப்போது ஸாயம்ஸந்த்யாஸமயம்; ஒரு நாழிகை கழித்து அடியேன் ஸந்நிதிக்குள் விடைகொண்டேன்; அப்போது வஸந்தோத்ஸவமென்று ஞாபகம். அங்கே அடியேன் ஒருபக்கமாக இருந்து கொண்டிருக்கையில், அந்த புத்தங்கோட்டம் ஸ்வாமியும் அங்குப் பெருமாள் ஸேவைக்காக வந்து அப்போது அங்கு உபஸ்திதர்களாயிருந்த சில வித்வான்களுக்கு அடியேனைச் சுட்டிக் காட்டி "இந்த பிள்ளையாண்டான் யாரோ தெரியவில்லை; என்னிடம் வலுவில் வந்து "சேஷம் கோபேந பூரயேத்" என்கிறார்; எனக்கு ஆறவேயில்லை; என்று பெருமிடறு செய்து பலபல

ஸாதிக்கிறார். அவர்களெல்லாரும் விஷயமென்ன? என்று கேட்க; அதற்கு அவ "விஷயம் எதுவாவதிருக்கட்டும்; இவருடைய வயது என்ன? என்வயது என்ன? இவர் வந்து என்னை (சேஷம் கோபேந பூரயேத்) என்பதா? இது என்ன த்ருஷ்டத்தனம்!" என்று கத்துகிறார்; ஆறாத சீற்றம் பொங்க அலமருகின்றார்.

அப்போது அங்கு எழுந்தருளியிருந்த மஹாப்ராஜ்ஞரான ஸ்ரீமத்பரம ஹம்ஸ பௌண்டரீகபுரம் ஸ்வாமி "தேவரீருக்குக் கோபமுண்டானபடியாலன்றோ அவர் சேஷம் கோபேந பூரயேத் என்று சொல்லியிருக்கவேண்டும்; தேவரீருக்கு கோபமுண்டானது வாஸ்தவந்தானே! எதனாலுண்டாயிற்று? நடந்தவிஷயத்தை நாங்கள் தெரிந்துகொள்ளும்படி ஸாதிக்கலாகாதோ?" என்றார். பிறகு, நடந்த விஷய சர்ச்சைகளை அந்த ஸ்வாமியே விரித்துரைக்க நேர்ந்தது. அடியேன் விஜ்ஞாபித்தவற்றையும் அந்த புத்தங்கோட்டம் ஸவாமியே அநுவதிக்க ப்ராப்தமாயிற்று. எல்லாவற்றையும் கேட்ட பௌண்டரீகபுரம் ஸ்வாமி "அந்த பிள்ளையாண்டான் சொன்னதில் அவத்யம் ஒன்றுமில்லையே; அதன்மேல் இவ்வளவு மநஸ்தாபம் வளருவதற்கு ஹேதுவில்லையே, அப்படியும் சொல்லலாமென்று தேவரீர் ஒரேவார்த்தையில் முடித்திருக்கலாமே" என்று ஸாதித்சார். அப்போது பக்கத்திலிருந்த மற்றொரு வித்வான் "அப்படியும் சொல்லலாமென்று சொன்னால் அந்த பிள்ளையாண்டான் விட்டுவிடுவரோ? அப்படித்தான் சொல்லவேணும்; வேறுவிதமாகச் சொல்லக்கூடாதென்பதன்றோ அவருடைய அபிப்ராயம் என்றார். இப்படியாக வார்த்தைகளின்மேல் வார்த்தை மிகமிக வளர்ந்து சென்றது. தீக்ஷிதர் எழுதியிருப்பது ரஸ்யமன்று என்றே பலரும் முடிவுசெய்தார்கள். இவ்விஷயம், அப்போது நடந்துகொண்டிருந்த ஸுப்ரஸித்தமான வேதாந்த தீபிகா பத்ரிகையில் வெளிவந்துமுள்ளது. புத்தங்கோட்டம் ஸ்வாமியோடு அன்று தொடக்கமான வாதம் அவ்வளவோடு நின்றுவிடாமல் மற்றும்பல விஷயங்களிலும் பெருகி பரஸ்பரம் பல க்ரந்த ரசனைகளும் ஏற்பட்டுவிட்டது.

அன்பர்களே! இது ஜகத்ப்ரஸித்தமான இதிஹாஸம். இதனையறியாத ஸ்ரீவைஷ்ணவர் ஒருவருமிலர். இத்தமிழுரையாசிரியரும் அறிந்தவரே. அறிந்து செய்யக்கூடியதென்னவிருக்கிறது. தீக்ஷிதவியாக்கியானத்தை மறைக்கவோ திருத்தவோ முடியாமல் அப்படியே அச்சிட்டுவிட்டார். தாம் ஒரு தமிழுரையெழுதிவருகிறாரே. அதில் தீக்ஷிதரையும் தழுவாமல், நம்முடைய ஜகத்ப்ரஸித்தமான விவரணத்தைக் கண்டதாகவும் காட்டிக்கொள்ளாமல் பரம ஸாதுவாய் "திருமால் குற்றமற்ற தான்........" என்று முடித்திட்டார். உள்ள பதத்திற்கு உரையிட்டால் போதுமன்றோ. உண்மையில் இது அநபாயமான வழி, "குற்றமற்ற திருமால்" என்னுதே "திருமால், குற்றமற்னதான்" என்று வாக்யபேதம்பண்ணி யெழுதியதில் ரஸகனமான விசேஷார்த்தமிருக்கும் போலும்.

இப்படி நாலைந்து சுலோகங்களையே எடுத்துக்காட்டுவதனால் என்னுகும். திடீர் திடீரென்று எந்த ஏட்டைப் புரட்டினாலும் வருந்தத் தக்கதாகவேயுள்ளது. "குணதோஷௌ புதோ க்ருஹ்ணன்..... கண்டே நியச்சதி" என்கிற சுலோகத்தின்படி தோஷ ப்ரகாசனம் பண்ணுவது யுக்தமன்று; நமக்கு தோஷப்ரகாசனம் உத்தேச்யமுமன்று; பலவாயிரக்கணக்கான பணத்தைச் செலவு செய்து செய்யும் பெரிய காரியங்கள் அல்பஜ்ஞர்களுக்கும் பஹுஜ்ஞர்களுக்கும் ஒருங்கே பயன்படவேண்டும்; அந்யதரர்களுக்காவது பயன்படவேண்டும். சுவைமிக்க பொருள்களை எழுதவே வேண்டா. வ்யுத்பந்நர்கள் பரிஹஸிக்கவோ வசைகூறவோ இடமில்லாதபடியாகவாவது இருக்கவேண்டாவா? "காஷாயதண்ட மாத்ரேண யதி: பூஜ்யோ ந ஸம்சய:" என்பதற்கு, காஷாய தண்டங்களைமட்டும் கண்டு யதியென்று கௌரவிக்கக்கூடாது; *ஸம்சய:*— அவருடைய நடத்தையில் ஸம்சயிக்க வேண்டியிருக்கிறது-

என்று பொருள் கூறுமாபோலே நேர்வழியைவிட்டுக் குடிலமானவழியை அவலம்பித்து அர்த்தமுரைத்தால் இது உலகுக்குச் செய்த உபகாரமாகுமா?

யாதவாப்யுதயத்திலே நாலாவது ஸர்க்கத்திலே (28)

"த்ரஸ்யந் முகுந்தோ நவநீத சௌர்யாத் நிர்ப்புக்நகாத்ரோ நிப்ருதம் சயாந:,
நிஜாநி நிச்சப்ததசாம் யயாசே பத்த்வாஞ்ஜலீம் பாவவிபூஷணநி."

என்பதொரு ச்லோகம். சிறிய திருமடலில் "ஆங்கொருநாளாய்ப்பாடி, சீரார்கலையல்குல் சீரடிச் செந்துவர்வாய், வாரார்வனமுலையாள் மத்தாரப் பற்றிக்கொண்டு............சீரார் தயிர் கடைந்து வெண்ணெய் திரண்டதனை, வேரார்நுதல்மடவாள் வேறோர்கலத்திட்டு, நாரார்உறி யேற்றி நன்கமையவைத்ததனைப் போரார் வேற்கண்மடவாள் போந்தனையும் பொய்யுறக்கம், ஓராதவன் போலுறங்கியறிவுற்றுத், தாரார் தடந்தோள்களுள்ளளவும் கைநீட்டி ஆராத வெண்ணெய் விழுங்கி, அருகிருந்த மோரார்குடமுருட்டி முன்கிடந்ததானத்தே, ஓராதவன்போல் கிடந்தான்" என்றதையும் மற்றும் சில பாசுரங்களையும் திருவுள்ளத்திற்கொண்டு இந்த ச்லோக மருளிச் செய்திருக்கிறார் ஸ்வாமி, இதன் சுவைமிக்க பொருள்களை இங்கு நான் விவரிக்கப் புகவில்லை. இவருரையில் வருந்தத்தக்கதொன்றைமட்டும் காட்டுகிறேன்.

மேலே காட்டின சுலோகத்தில் உத்தரார்த்தத்தில் "யயாசே பத்த்வா அஞ்ஜலிம் பூஷணாநி" என்றிருக்கிறது. கைகூப்பிக்கொண்டு யாசித்தானென்று எளிதாகப் பொருள்படாநிற்க, தீக்ஷிதரும் இம்படியே அந்வயித்து உரைத்திருக்க, (அஞ்ஜலிம் பத்த்வா) என்றதைப் பூர்வார்த்தத்திலே கொண்டுபோய் [*அஞ்ஜலிம் பத்த்வா சயாந:*] அஞ்சி உடலை ஒடுக்கிக் கொண்டு அசையாமல் ஓரிடத்தில் *கைகளைக் குவித்துக்கொண்டு* கவிழ்ந்து படுத்தவனுன்— என்றெழுதுகிறார் தமிழுரைகாரர். இது கண்விழித்துக்கொண்டு எழுதினதா? கண்ணுறங்கிக் கொண்டே யெழுதினதா? என்று தெரியவில்லை. "அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிசிச்யே மஹோததே:" என்று ஸ்ரீராமாயணத்தில் சொன்ன ஸமுத்ர தீரசயனமா இது? ஒவ்வொருவரும் ச்லோகத்தையும் உரையையும் வாசித்துப் பார்க்கவேணும். உற்று ஊன்றிப் பார்க்கவேண்டா; மேலெழப்பார்த்தாலும் போதுமே. இங்கிருந்து சில ஏடுகளைத் தள்ளுவோம்; மேலே ஆறுவது ஸர்க்கத்தில், (ச்லோ-4.)

அதியஜேத நிஜாம் யதி தேவதாம் உபயதச் ச்யவதே ஜுஷதேப்யகம்,
க்ஷிதிப்ருதைவ ஸதைவதகா வயம் வநமிஹாநவதா கிமஹித்ருஹா. என்பது

இடையர்கள் வழக்கமாக இந்திரனுக்குப் பூஜை செய்துகொண்டிருந்ததைக் கண்ணபிரான் விலக்கி, அந்தப் பூஜையை மலைக்கு இடும்படி நியமிக்கும் பிரகரணத்திலுள்ள சுலோகமிது. ப்ரத்யக்ஷமாக நம்மையும் பசுக்களையும் ரக்ஷிக்கின்ற மலையைவிட்டு, ரக்ஷிக்கமாட்டாதவனான இந்திரனைப் பூஜிப்பதனால் என்ன பயன்? என்பது இங்குக் கூறப்படுகிறது. இந்திரனாலே என்று பொருளுடையதான [*அஹித்ருஹா*] என்கிற பதத்திற்கு தீக்ஷிதருமெழுதாதவொரு விசேஷார்த்தமெழுதுகிறார் தமிழுரைகாரர்;

"அஸுரோபி வ்ருத்ரோ பாகவத இதி
தத்த்ரோஹோ ந யுக்த இதி பாவ:"

வ்ருத்ரன் அஸுரனானாலும் அவன் பகவத்பக்தனாகையாலே அவனைக் கொன்றது தவறு என்று பாவம்—என்றெழுதப்பட்டுள்ளது: "என்று பாவம்" என்றது யாருடைய பாவமோ?

இந்தப் பாவம் இங்கு எதற்காகத் தெரிவிக்கப்படுகிறதோ தெரியவில்லை. பெரியாழ்வார் "சீமாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீயெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்" என்று கண்ணன் கதையொன்று அருளிச்செய்கிறார். மாலிகன், தனக்குத் தோழனாயிருக்க அவனைத் தலையறுத்தது தப்பு என்று பாவம்—என்றெழுதியிருப்பர் போலும். இந்திரன் வ்ருத்ரனைக்கொன்றது தவறாகையாலே அவனை ஆராதிக்கக் கூடாது என்கிறார். கண்ணன்—என்று பாவத்தை விவரிப்பர்போலும். இப்படி விரஸமான பொருள்கள் பலபல.

[*கூிதிப்ருதைவ ஸதைவதகா வயம்:*] என்றதற்குப் பதவுரையெழுதுகிறார்—"இம்மலையையே தேவதையாக நாம் உடையவராவோம்" என்று; இவ்வுரையினால் தெரிவதென்னவென்றால், இடையர்கள் இம்மலையைத் தேவதையாகக்கொள்ள மாட்டோம் என்று சொல்லுவதாகவும், அது பிசகு, நாம் இம்மலையையே தேவதையாகக்கொள்ள வேணுமென்று கண்ணன் வற்புறுத்துவதாகவுமே தெரியவரும். மூலத்திற்கு இதுவா பொருள்! இம்மலையையே நாம் தேவதையாகவுடையோம், தேவதையாகக் கொண்டிருக்கிறோம்—என்றல்லவா பொருள். *ஆவோம்* என்பது எதிர்காலத்தில் ஸித்திக்கவேண்டிய விருப்பத்தைத் தெரிவிக்குமதென்பதை அந்தோ அறிந்திலர். "எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் உன்றன்னோடுற்றோமேயாவோம்" என்கிற திருப்பாவைப் பாசுரத்தைச் சிந்தனை செய்தாலும் போதும். "உன்றன்னைப் பிறவிபெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்" என்றாப்போல "இம்மலையையே நாம் தேவதையாக வுடையோம்" என்ன வேண்டும், இத்தகைய சொல்திருத்தங்கள் வரிதோறும் செய்ய வேண்டியதுண்டு, இந்நாட்டில் வழங்காத தமிழ்ப்பாஷையாயிருக்கின்றது. இருபது வருடங்களுக்குமுன்பு உத்யானபத்ரிகையில் வெளிவந்த குவலயானந்த வியாக்கியானமொன்றில் இந்த சுலோகத்தை விவரிக்குமிடத்து (ஸதேவதகா:) என்று பாடம் காட்டப்பட்டது. அது வேதாநுஸாரியானபாடம். இதை உத்யாந பத்ராதிபருமறியப்பெற்றிலரென்று அப்போது வெளியிட்டோம். அவரும் தெளிந்து பாடத்திருத்தம் வெளியிட்டார் அப்போதே. அந்த சுவைமிக்கபாடம் இவ்வுரைகாரர்க்குக் கிடைக்கவில்லையந்தோ!

மேலே ஏடுகளைத் தள்ளிக்கொண்டே போனோம். கடைசியான (24) ஸர்க்கத்தில் (92)

"ஸ்வபதநலிநபாஜாம் ஸ்வர்க்க மோக்ஷௌ யதார்ஹம்
கரணவிகமகாலே கல்பயிஷ்யந் க்ரமேண,
மதுரிபுரிஹ தூநம் மந்தபுண்யைரலப்யென
ஸமதநுத விஹாரைரஸ் தாவுபௌ ஸம்ப்ரயுக்தௌ"

என்கிற சுலோகத்தினுரையில் என்ன தெரிவிக்கப்படுகின்றதென்பதை ஜிஜ்ஞாஸுக்கள் காணவேணும். சிசுபாலவதமென்கிற மாக காவியத்திற்குத் தமிழுரையெழுதியுள்ளாரொருவர்; அதில் இரண்டாவது ஸர்க்கத்தின் முதல் சுலோகம்;

"யியக்ஷமாணேநாஹூத: பார்த்தேநாத த்விஷன் முரம்,
அபிசைத்யம் ப்ரதிஷ்டாஸு: ஆஸீத் கார்யத்வயாகுல:" என்பது

*யியக்ஷமாணேந* — இயக்ஷமாணரென்பவரால், *ஆஹூத:*— அழைக்கப்பட்டவராய், *பார்த்தேந*—அர்ச்சுனனாலே, *அத*—அதற்குப் பிறகு, *த்விஷந்*—த்வேஷித்தவராய், *முரம்*—முரனையும், *சைத்யமபி*—சைத்யனையும், *ப்ரதிஷ்டாஸு*:—ப்ரதிஷ்டை செய்யவேண்டினவராய், *கார்யத்வய ஆகுல: ஆஸீத்*—இரண்டு கார்யத்திலீடுபட்டவரானார். இதே ரீதியான வியாக்கியானம் காவ்யம் முழுமைக்கும் இயற்றியச்சிடப்பட்டு மூன்றுவால்யமாக அறுபது ரூபாய்க்கு விற்கப்பட்டு வருகிறது. Sixth Edition Tenth Edition என்று ஏறிக்கொண்டே வருகிறது. ஸ்ம்ருதஸ்ய உபேக்ஷாநர்ஹத்வம் ஸங்கதி: போதும்.

மேலேயெடுத்த *ஸ்வபதகலிந பாஜாம்* என்கிற சுலோகத்திற்குத் தமிழுரை கேளீர்; "தன் திருவடித் தாமரையடைந்தார்க்கு உடல் விடுங்காலத்திலே தக்கவாறு ஷ்வர்க்கமும் மோக்ஷமும் முறையே அளிப்பவனாய். மதுசூதனன் அற்பபுண்யம் செய்தவர்கள் அடைய ஆகாத ஸ்வர்க்க மோக்ஷங்கள் இரண்டையுமே சேர்த்து இங்குத் தனது விஹாரங்களாலே விஸ்தரித்தருளினான்". சுலோகத்தின் கருத்தைக் கையிலங்கு நெல்லிக் கனியாகக் கண்டீர் களல்லவா? எழுதினவர் ஒரு கருத்தை வைத்துக்கொண்டு எழுதின பங்க்திகளா இவை? (*ஸமதநுத*) என்று மூலம். தநு-விஸ்தாரே; என்று தாதுவாகையாலே, விஸ்தரித்தானென்றார்; (ஸம்) என்று உபஸர்க்கமிருக்கையாலே விஸ்தரித்தருளினானென்றார். எதை விஸ்தரித்தருளினான்? போகமோக்ஷங்களிரண்டையும், எப்படி விஸ்தரித்தருளினான்?—சேர்த்து விஸ்தரித் தருளினான். எதனாலே?—விஹாரங்களாலே. (முறையே அளிப்பானாய்) என்று ஒன்று கிடக்கிறது. அதற்கு என்ன உபயோகமோ அவர்தாமேயறிய வேண்டும். அந்தேவாஸிகள் அறியக் கூடும். "பெருப்பெருத்த புண்ணியங்கள் செய்து பெறவேண்டிய மறுமைப் பேறுகளை இவ்விடத்தில் க்ருஷ்ணலீலைகளை நேரில் ஸேவிக்கப்பெற்றவர்கள் புண்ணியமொன்றுமின்றியே பெற்றார்கள்; "இங்கேகாண இப்பிறப்பே மகிழ்வர்" என்ற திருவாய்மொழியின்படியே யாயிற்று" என்றிரண்டுவரியில் முடிக்கவேண்டியதற்கு அர்த்தமற்ற விஸ்தரம்.

யாதவாப்யுதயரஸாநுபவம் இவ்வளவோடு நிற்க ஸுபாஷிதநீவீ
ரஸாநுபவம் சிறிதுசெய்வோம், இதற்குச் சிறிது அவதாரிகை கேண்மின்.

## ஸுபாஷித நீவீரஸாநுபவம்

யாதவாப்யுதய ப்ரதமஸர்க்கத்தின் முடிவு ச்லோகத்தில் (வைகுண்டவாஸியான புத்தங் கோட்டம் ஸ்வாமியின் இதிஹாஸத்தைத் தெரிந்துகொண்டீர்கள். திருச்சி ஏ. வி. கோபாலாசாரிய ஸ்வாமியின் ஓர் இதிஹாஸத்தையும் இந்த ப்ரகரணத்தில் தெரிந்துகொள்ளவேண்டியது அவஸியம். தெரிவிக்கிறேன் கேண்மின். 1956ல் வெளியிட்ட தானேயெழுதிய தன் சரிதையில் பக்கம் 227லிருந்து எடுத்துக் காட்டுவது இது:—

"ஏகயைவ குரோர் த்ருஷ்ட்யா த்வாப்யாம் வாபி லபேத யத்,
ந தத் திஸ்ருபிரஷ்டாபி: ஸஹஸ்ரேணாபி கஸ்யசித்".

என்பது தேசிகனுடைய ஸுபாஷிதநீவியிலுள்ளவொரு ச்லோகம். இதற்கு கோபாலாசாரியார் ஸ்வாமி அர்த்தம் எழுதி வெளியிட்டார்—ஆசாரியனுடைய உட்கண்ணாகிய ஒரு கண்ணாலோ வெளிக்கண்ணுமாகிய இரண்டுகண்களாலோ அடையக்கூடிய பேற்றை சிவனுடைய முக்கண் களாலும், பிரமனுடைய எட்டுக் கண்களாலும், இந்திரனுடைய ஆயிரங்கண்களாலும் அடையமுடியாது—என்று. இதைக் கண்டவுடனே அடியேன் எழுதினேன்—இந்திரன் ஆயிரங்கண்ணனென்று ப்ரஸித்தியுடையவனாயினும் இந்த ஸ்தலத்தில் இந்திரனை ஸ்மரிக்க நியாயமில்லை. ப்ரக்ருதச்லோகத்தில் ஜ்ஞானவிகாஸத்தை யுண்டுபண்ணுவது விஷயம். சதுர்முக ப்ரஹ்மா ஸரஸ்வதீவல்லபனாய் நான்கு வேதங்களையும் கரைகண்டவனாகையாலே ஜ்ஞான விகாஸனத்தில் அவனுக்கு ப்ரஸக்தியுண்டு; பரமசிவன் ஸர்வஜ்ஞனென்று பேர் பெற்றவனாகையாலும், "ஈசாநாத் ஜ்ஞாநமந்விச்சேத்" என்று சொல்லப்பட்டவனாகையாலும். நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் "நுண்ணுணர்வின் நீலார்கண்டத்தம்மான்" என்று ஞானச்சிறப்பைக்காட்டி அருளிச்செய்திருக்கையாலும் அவனுக்கும் ஜ்ஞாநவிகாஸனத்தில் ப்ரஸக்தி உண்டு. இந்த பத்ததியில் இந்திரன் நினைவுக்குவர ப்ரஸக்தியே கிடையாது. மேலும் இங்கே சிவனை முன்னே சொல்லி, அவனிலும் மேம்பட்ட பிரமனை அதற்கடுத்தபடியாகச் சொல்லி, இவ்விருவர்களிலும் தண்ணியனான இந்திரனை அதன்பிறகு சொல்ல ஔசித்யமுமில்லை. ஆகவே, 'ஸஹஸ்ரசீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷ:" என்று புருஷஸூக்தத்திலும், "தோள்

களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க் கண்களாயிரத்தாய்" என்று திருவாய்மொழியிலும் ஆயிரம் திருக்கண்களையுடையவனுகச் சொல்லப்பட்ட ஸ்ரீமந்நாராயணனே இங்குப் பொருளாகத்தகும். ஆசார்யனுடைய கடாக்ஷத்தாலே உண்டாகும்பேறு திரிமூர்த்திகளின் கடாக்ஷத்தாலுமுண்டாகாது என்று சொல்லுவதே இங்கு வக்தாவுக்கு உத்தேசயமானது; இதுதான் ரஸவக்தரம்—என்பதை மிகவும் விரிவாக எழுதி வெளியிட்டேன். இதை அந்த கோபாலாசார்ய ஸ்வாமி கடாக்ஷித்து ப்ராமாணிகராகையாலே உள்ளமுருகி "இப்படி உண்மையான அர்த்தம் ப்ரதிவாதிபயங்கர குலதிலகருக்கன்றி வேறு யாருக்கு ஸ்புரிக்கும்"? என்று சொல்லி வைகுண்ட ஏகாதசியன்று ஸ்ரீரங்கம் ஆயிரக்கால் மண்டபத்தருகில் ஆயிரம் பேரெதிரில் அடியேனைத் தழுவிக்கொண்டு ஆனந்தபாஷ்யம் பெருக்கினுரென்பதை அடியேன் நாள்தோறும் நினைப்பவன். 'தேசிக பக்தர்களான வித்வான்கள் பல பேர்களிருந்தும் ஒருவரும் இதைக் கண்டு பிடித்துத் தெரிவிக்கவில்லையே' என்று வருந்தினுர்.

(*ஸஹஸ்ரேணுபி*) என்பதில் அர்த்த விசாரமிருக்கட்டும். பூர்வார்த்தத்தில் (த்வாப்யாம் வாபி) என்பதற்குப் பொருள் சொல்லுமவர்கள் உட்கண்ணும் வெளிக்கண்ணுமாகிற இரண்டு கண்களாலேயென்று கூறுவர் சிலர். ஏகயா என்பதாலே உட்கண் சொல்லியாய் விட்டபடியாலே மீண்டும் அதைக் கூட்டிக்கொள்வது பிசகு. "யம் யம் ஸ்ப்ருசதி பாணிப்யாம் யம் யம் பச்யதிசக்ஷுஷா" என்கிறபடியே மனஸ்ஸஹகாரமில்லாது வெளிக்கண்களால் கடாக்ஷித்தாலும் பேறுதப்பாதென்றபடி. "ஸ்ரீமத்ப்யாம் ஸ்யாதஸாவிதி" என்ற அதிகரண ஸாராவளிப்படியே சுபேந மனஸா நினைத்தாலும் போதும்; அமலங்களாக விழிக்குமென்றபடி அங்கணிரண்டுங் கொண்டு நோக்கினுலும் பேறுதப்பாது என்றபடி.

இந்தச்லோகம் தேசிகனுடைய ஸுபாஷித நீவியிற்போல ஸங்கல்பஸூர்யோதயத்திலுமுள்ளது. பலபடியாகப் பொருள்வரைந்து ப்ரக்க்யாதிபெறவேணுமென்று பேரவாக் கொண்ட வுரைகாரரொருவர் 1, 2, 3, என்று வரிசையாக மோர்க்குறிப்போட்டு வைத்துக் கொண்டே போகிறுர். எழுதுகிறுர்—ஒற்றைக்கண் பொட்டையான ஆசார்யரும் இருக்கக் கூடுமாகையாலே அவர் ஒற்றைக் கண்ணுலே பார்த்தாலும் போதும் என்று. அநுபவிக்கவும் தகாத அவை கிடக்க; ஸஹஸ்ரேணுபியென்றவிடத்தில் இந்திரனைக்கொள்ள ப்ரஸக்தியே கிடையாதென்று நாம் எழுதியிருந்ததைக்கண்டு தெளிவு பெற்றுர் பாவம்!

"*ஸஹஸ்ரேணேதி—இந்த்ரஸ்ய*" என்று முன்னம் எழுதிவிட்டு, "இந்த்ரஸ்ய அப்ரஸக்த்யா ஸஹஸ்ராக்ஷ இஹ பரமபுருஷ ஏவாஸ்து" என்கிறுர். இந்திரனுக்கு இங்கு ப்ரஸக்தியில்லையென்பதை யார் சொன்னுர் தெரியுமோ? "ஸஹஸ்ராக்ஷ: இஹ பரமபுருஷ ஏவ க்ராஹ்ய:" என்று ஆர்ஜவத்தோடு எழுத முடியவில்லை. அஸ்து என்கிறுர் பாவம்!

இந்த ப்ரகரணத்தில் மற்றொன்றும் தெரிவிக்கிறேன். யதிராஜ ஸப்ததியில் "ஸ்தவிர நிகமஸ்தோம ஸ்தேயரம்" என்கிற ச்லோகத்தின் உத்தரார்த்தம் "ரஸபரிமலச்லாகா கோஷஸ் புடத்புடபேத நம் லவணவணிஜ: கர்ப்பூரார்க்கம் கிமித்யபிமங்வதே" என்கிற அபத்தபாடமாக வழங்கி வந்தது. விசேஷண விசேஷ்யங்களுக்கு ஸமந்வயமில்லாத தப்புப்பாடமிது. "*கர்ப்பூரோத்கம்*" என்று அடியேனுக்குத் திருத்தகப்பனுர் கற்பித்த பாடம். இவ்வண்ணமாகத் திருத்தியேயாகவேண்டுமென்று பலவாண்டுகட்குமுன்பு வெளியிட்டேன். இவன் தெரிவித்தா நாம் திருத்துவதென்று பலர் எதிர்வாதங்கள் செய்தார்கள். அந்த சுலோகம் ஸங்கல்ப ஸூர்யோதயத்திலும் (2-126) வருகிறது. *கர்ப்பூரோத்க*மென்கிற பாடத்திற்குப் பரிவேஷ பூஷணம் ப்ராப்தமாயிருக்கிறது. மூலத்திலோ அர்த்தத்திலோ நாம் தெரிவிக்குமதில்தான் *கட்டகுட்யாம் ப்ரபாதம்.* என்பது சிலா லிகிதம்.

அன்பர்காள்! ஸு்பாஷித நீவீரஸாநுபவத்தை இப்படி ஸம்க்ஷேபமாக விட்டுவிடுவதற்கு மனமில்லை. *"நீவீரஸாஸ்வாதிநீ"* என்னும் பெயரால் வடமொழியில் ஒரு நூலிட்டு அதனை நமது வைதிகமநோஹரா மூலமாக வெளியிட விரும்பியிருக்கிறோம். ரஸிக வித்வான்கள் ஸமய ப்ரதீக்ஷிகளாயிருப்பார்களாக. ... ... ... ...

# பாதுகா ஸஹஸ்ர ரஸாநுபவங்கள்

பாதுகாஸஹஸ்ரத்திற்கும் பெருஞ்சுமையான வியாக்கியான புத்தகமொன்று கைக்கு எட்டியுள்ளது. புதிதானஇதில் முன்னுரையில் தெரிவிக்கப்படுவதாவது–இந்த ஸஹஸ்ரத்திற்கு ஏற்கனவே சிலருடைய வியாக்கியானங்கள் வெளிவந்திருப்பதாக; அதாவது, [ஸம்ஸ்க்ருதவியாக்கியானமும், அதையடியொற்றிய தேரழுந்தூர் ஆக்கூர் ஆண்டவன் ஸ்வாமிகளின் வியாக்கியானமும், D. T. திருமலைதாதாசாரியஸ்வாமியின் வியாக்கியானமும் வெளிவந்திருப்பதாக]க் காட்டி அவற்றிலுள்ள குறைகளை நீக்குவதற்காகப் புதிய உரைகாரரான தாம் முன்வந்திருப்பதாக ஒரு அறிக்கை. தமது உள்ளத்தில் ரஸகனமான பல அர்த்த விசேஷங்கள் ஸ்புரித்ததாகவும், அவ்வற்றை வெளியிடாமலிருக்கமுடியாமல் தாம் புதிதாக உரையெழுதி வெளியிட முன்வந்ததாக மற்றோரறிக்கை. எல்லாவற்றையும் ஊன்றிப்பார்ப்பவர்கள் எங்கும் எப்போதும் இருப்பர்களாகையாலே தம்முடைய ப்ரயாஸம் ஸபலமாகுமென்று தெரிவிப்பதொன்று. உண்மையில் எதையும் ஊன்றிப்பார்க்கும் நாம் பார்த்த பார்வையிலிருந்து தோன்றின ஆயிரக்கணக்கான அம்சங்களில் சிலவற்றை மட்டும் ஸ்தாலீபுலாக ந்யாயேந உபஹரிக்கிறோம்.

அர்த்தங்களை நெஞ்சிற்கொள்வதிருக்கட்டும்; கொண்ட அர்த்தங்களை, வாசிப்பவர்கள் ருஜு்வாக உணரும்படி எழுத்தில் வடிக்கத் திறமை பெற்றவர்கள் மிகச்சிலரே. உரையிட எடுத்துக்கொண்ட மூலத்தின் பொருளைக் கவி கருதியபடியே கண்டுகொளல், கண்டுகொண்டபின் விவக்ஷிதங்களை நன்கு வெளிக்காட்டவல்ல சப்தராசிகளை அழகுபடப் பொறித்தல், என்னும் இவ்விரண்டும் அருந்தவப்பயனாக அமையவேண்டும். "நால்பஸ்ய தபஸः ப்பலம்" என்பது இதற்கேயாம். "அந்தர் குடுகுடாயதே, பஹிர் வக்தும் ந சக்யதே" என்பர் ஒருவர், பலபல நூல்களை யெழுதிப் பழக்கப்பட்டவர்களுக்கும் வாய்ப்பதரிது அரிது அரிது. அதிலும், இப்போது நாம் விமர்சிக்கும் உரைகளை யெழுதியவர் கல்விபல கற்றிருக்கலாம், கற்றவரே. எனினும் பெரும்பாலும் விபரீதக்ரஹணம். லேகனமும் விபரீதம். இது அசூயையினால் எழுதுவதன்று. அபரிஹார்யமான துககம் எழுதுவிக்கின்றதத்தனை. குணங்கண்ட விடத்திலே உயிரைவிடுபவன் யான். காரணுபாஸங்களாலே கண்டபடி யெழுதமாட்டேன். விவக்ஷிதங்களை அந்யூந அநதிரிக்தமாகத் தெரிவித்து, மேன்மேலும் விடாது வாசிக்கவேணுமென்கிற ருசியை விளைத்து எழுதுபவர் தற்கால எழுத்தாளர்களுள் ஸ்ரீவைஷ்ணவஸு்தர்சன பத்ராதிபதி ஸ்வாமியை ப்ரதம பரிகணநீயராகக் கொண்டிருக்கிறேன்.

உலகமெல்லாம் மெச்சி சிரோபூஷணமாகக் கொள்ளும் சிறந்த நூல்களுக்கு உரையிடுவதென்பது சிறியகாரியமன்று வெகு ஜாகரூகதையுடன் செய்யப்படவேண்டியது. காலை யெழுதிக் கொடுப்பதை மாலை அச்சில்பார்ப்பது பெரிதன்று, "சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை, வெல்லுஞ் சொல்லின்மை யறிந்து" என்கிற குறளை நிச்சலும் நெஞ்சிற்கொள்ளவேணும். "ஆபரிதோஷாத் விதுஷாம் ந ஸாது மந்யே" என்றார் காளிதாஸ மஹாகவி. அதை நான் உகப்பவனல்லேன். இதரேஷாம் விதுஷாம் பரிதோஷத்திற்கு முன்னே ஸ்வாத்மபரிதோஷம் ப்ரதானம். அந்தமஹாகவியே "ஸர்வ: காந்தம் ஆத்மீயம் பச்யதி" என்று கூறின கணக்கிலே தம்மெழுத்தைத்தாமே உகந்துகொள்ளுமவர்கள் விதுஷாம் பரி

தோஷத்தை எதிர்பார்க்க வேண்டியது அவசியமே. எழுதச்சொல்பவர்களுக்காக எழுதிவிடுவதும், பேசச் சொல்பவர்களுக்காகப் பேசிவிடுவதும் ப்ரயாஸஸாத்யமன்று.

யாகங்களில் நான்குபக்கங்களிலும் காலக்ஷேபம் நடத்தப்படுமாம். ஒருபக்கத்தில்.

*ராமோ லக்ஷ்மணமப்ரவீத்*-ராமனென்றால் ராமனுயிற்று. லக்ஷ்மணனென்றால் லக்ஷ்மணனுயிற்று. *மப்ர* என்றால் ஹநுமத் தேவனுயிற்று. *வீ* என்றால் அவருடைய புச்சமாயிற்று. *த்* என்றால் அந்தவாலில் கட்டிய கண்டையாயிற்று. என்று ஒருவருடைய காலக்ஷேபமாம்.

மற்றொருபக்கத்தில்—உமாஸுதம் சோகவிநாச காரணம் நமாமி விக்நேச்வரபாத பங்கஜம்—[*உமா ஸுதம்*] முக்கண்ணன் பெண்டாட்டி மூத்த பிள்ளை. [*சோ*] இதுக்கர்த்தம் பிறகு சொல்லுவோம். [*கவிநாசகாரணம்*] கவிகளுக்கெல்லாம் நா சத்தைப் பண்ணுவராம். [*ந மாமி*] நித்யப்ரம்மசாரியாகையால் மாமியாரில்லையாம். [*விக்நேச்வரபாமும் கஜம்*] முகந்தான் யானைமுகமென்றால் காலும் யானைக்காலாம்.

மற்றொரு பக்கத்தில், பம்போபவன மாருதம்—[*பம்போ*] ஸீதாவியோக துக்கிதரான பெருமாள் பம்பைக்கரையிலே உட்கார்த்து ஓவென்று கத்துகிறார். [*பவநமாருதம்*] பவனமென்றாலும் காற்றாய், மாருதமென்றாலும் காற்றாயிருக்க, இரட்டித்துச் சொன்னது—அலை மேலலை மலைமேல்மலை இடிமேலிடி என்னுமாபோலே காற்றுமேல்காற்று குட்டிக்காற்று வாடைக்காற்று தென்றல்காற்று என்கிறது.

மற்றொருபக்கத்தில், *வநம் சைத்ரரதோபமம்*—[*வனம்*] பெருமாள் ப்ரவேசித்த தண்டகாரண்யம் எப்படியிருந்ததென்றால், [*சைத்ராதோ பமம்*] சித்திரை மாதத்தில் நம்முடைய ஆராவமுதன் திருத்தேர்போலேயிருந்ததாம். சித்திரை மாதத்தில் வேறுசில ஊர்களிலும் ரதோத்ஸவம் நடந்தாலும் நம்மூர் தேருக்கு ஒப்பாகமாட்டாதென்று அப்பாஸாய்ப்பர்.

இந்த காலக்ஷேபங்களெல்லாம் ஏகதேசமாகும்படி அமைந்திருக்கிறது நாமின்று காணும் வியாக்கியானம். [*ஸந்த: ஸ்ரீரங்கப்ர்த்வீச சரணத்ராணசேகரா:*] என்பது முதல் சுலோகம். ஸ்ரீரங்கப்ர்த்வீ—ஸ்ரீரங்க க்ஷேத்ரத்திற்கு, *ஈச*—ஸ்வாமியானவருடைய என்கிற பொருள்தான் முந்தின வியாக்க்யாதாக்களுக்குத் தெரிந்ததாம். இதில் சுவையில்லையென்று சுவைவெள்ளம் பெருகும்படியான [ரஸிகனமான] அர்த்த விசேஷங்கள் தேசிகாநுக்ரஹ விசேஷத்தாலே தமக்கு ஸ்புரித்ததாம். [*ஸ்ரீரங்கப்ர்த்வீச*] ஸ்ரீயென்றால் ஸ்ரீமஹாலக்ஷ்மி. *ரங்க* என்றால் நீளாதேவி. ப்ர்த்வீ என்றால் பூமிப்பிராட்டி. இவர்களுக்கு ஈசன் என்று—ஸ்ரீரங்கநாதனைமட்டுமன்றிக்கே ஸகல எம்பெருமான்களையும் கொள்ளலாமாம். இதில் என்ன ரஸமென்றால்—பாதுகாஸஹஸ்ரம் ரங்கநாதனைப் பற்றிமட்டும் தோன்றியதன்று, உலகத்திலுள்ள ஸகல பகவான்களையும் பற்றித் தோன்றினதென்று ஸ்தாபிப்பதில் ரஸவிசேஷமிருக்கிறதாம். இதுதவிர, (ப்ர்த்வீ–ஈச) என்று பிரிக்காமல், (ப்ர்து ஈச) என்று பிரிப்பதில் இன்னும் ரஸவிசேஷமாம் அதாவது. *ப்ர்து*—பெரிய, *ஈச*—பெருமாள், பெரிய பெருமாள், சின்ன பெருமாளான உத்ஸவருடைய பாதுகையன்று; பெரிய பெருமாளான மூலவருடைய பாதுகை விவக்ஷிதமாம்.

இங்கு, ஸாரஸ்வத ஸாரஜ்ஞர்களான வித்வான்களுக்குச் சொல்லுகிறோம். ப்ர்து-மஹச்சப்தங்கள் பர்யாயமானாலும், பெரிய வித்வான்கள், பெரிய மனிதர்கள் என்னவேண்டுமிடங்களில் ப்ர்துசப்தத்தையிட்டுப் பேசுவதில்லை. (கேசந மஹாந்த: ஆகதா:) என்னவேண்டு

மிடத்தில் "கேசாப்ருதவ: ஆகதா" என்றால் சில ஸ்தூலகாயர்கள் வந்தார்கள் என்றுதான் பொருள்படும். ப்ருதுலோசன: ப்ருது நிதம்பபிம்பா; இத்யாதிப்ரயோகங்களே கிடைக்கும். கோவிந்தாசார்ஸாதிக்கிற விசேஷார்த்தம் எப்படியென்றால், ஸ்ரீ என்றால் திரு; அதனால் திருமலையைச் சொல்லுகிறது. *ரங்* என்று அரங்கத்தைச் சொல்லுகிறது. க என்று கஜாத்ரியான ஹஸ்திகிரியைச் சொல்லுகிறது. ஆக முக்கியமான மூன்று திவ்ய தேசங்களேயுஞ் சொல்லி, ப் என்று பிராட்டியைச் சொல்லுகிறது. (ர்) என்பது கதிவாசகமான தாது வாகையாலே ரங்கநாதனுக்கு ப்ரஸித்தமான கதியை நடையழகைச் சொல்லுகிறது. (த்) என்பது கஜாத்ரீசரான தேவப்பெருமாளுக்கு பீஜாக்ஷரமாகி அவரைச் சொல்லுகிறது (வ்) என்று வேங்கடத்திற்கு பீஜாக்ஷரமாகி அதை நினைப்பூட்டுகிறது (ஈ) ஈதல் கொடுத்தலாகையாலே திருவேங்கடமுடையான் கொடுக்குவ செல்வங்களேயும், அப்பெருமானுக்கு உண்டியில் ஈயப்படுகிற காணிக்கைகளேயும் சொல்லுகிறது (ச) என்று—மேலே சொன்ன மூன்று திவ்விய தேசங்களிலும் தினப்படி அமுது செய்கிற சர்க்கரைப் பொங்கலேச் சொல்லுகிறது. இந்த வகையில் ச்ராவ்யமாகவும் அக்லிஷ்டமாகவும் சொல்லிக்கொண்டுபோவார் கோவிந்தாசார். அவற்றையெல்லாம் எழுத்தில் காணும்படி செய்திருப்பதும் நன்று நன்றே. புத்தகங்களே வாங்கி அட்டைபோட்டு பேரஸ்து எழுதி அழகாக அடுக்கிவைத்துப் பார்த்துக்கொண்டிருப்பவர்களுக்கு உள்ளிருக்கும் விஷயம் எப்படியிருந்தாலென்ன?

ஸஹஸ்ரத்தின் முதல் சுலோகத்திலுள்ள *ஸ்ரீரங்கப்ர்த்வீச* என்பதற்கு ஸ்ரீதேவி நீளா தேவி பூதேவிகளுக்கு ஈசன் என்று பொருளெழுதின இவர் (*ரங்க*) என்பதற்கு நீளாதேவி யென்று பொருளுரைத்ததற்கு உபபத்திகாட்டப்புகுந்து "நீலே முஹ்யதி கிம் கரோமி மஹிதை: க்ரீதோஸ்மி தே விப்ரமை:" என்கிற வொரு ச்லோகபாதத்தை யெடுத்துக்காட்டி "*இத்யுக்தரீத்யா விப்ரமாதிக நீலாக்ரஹணாத்*" என்று (பக்கம் 6ல் எழுதியுள்ளார். இது மிக விசித்திரமானமருள். அத்யந்த சோசநீயமான மருள். எழுதினவர் மிகமிக அநுதபிக்க வேண்டிய மருள். ப்ராமாணிகராயிருந்தால் அவர் என்ன செய்யவேணுமென்றால், "ஏதோ அநவதானத்தினால் அப்படி மருண்டு எழுதிவிட்டேன், ரங்கபதத்தினால் நீளாதேவியைக் கொள்வதற்கு ஔசித்யமில்லை" என்றெழுதி வெளியிடுவர். மற்றொருவிதமாகவும் எழுதலாம்; (அதாவது) "இந்த அநௌசித்யம் எனக்கே தெரியும்; ஆனாலும் இதைக் கண்டுபிடித்து வெளியிடவல்லாரார்? என்று விப்ரலம்பமாகத்தானெழுதி விட்டேன். P. B. A. ஒருவரிருந்தாலும் இப்பெருஞ்சுமைப் புத்தகத்தில் அவருடைய பார்வை விழாதென்றிருந்து விட்டேன். வஞ்சனையை விளக்கினதற்கு க்ருதஜ்ஞனாயிருக்கிறேன்" என்று.

இவ்விடத்து விஷயத்தை விவேகிகள் அறிய விளக்குகிறேன். இவரெடுத்துக்காட்டிய ச்லோகபாதம் "பத்மே த்வந்நயநே ஸ்மராமி ஸததம் பாவோ பவத்குந்தலே நீலே முஹ்யதி கிம் கரோமி மஹிதை: க்ரீதோஸ்மி தே விப்ரமை:......" இத்யாதியான அந்த ச்லோகம் கவியின் சமத்காராதி சயம் விளங்குகின்றது. கண்ணன் ராதையோடு கூட சயனித்துக் கொண்டிருக்கையில் ஸ்ரீபூநீலாதேவிகளே நினைத்து வாய்வெருவுகிறான்; பத்மே!—ஸ்ரீதேவியே! *த்வந்நயநே ஸ்மராமி*—உனது கண்ணழகையே நினைந்துநைகின்றேன். *நீலே*—நீளாதேவியே!, *மம பாவ: ஸததம் பவத் குந்தலே முஹ்யதி, கிம் கரோமி*—என் சிந்தனையெல்லாம் எப்பொதும் உன் கூந்தலழகில் மூண்டு கிடக்கிறது, என் செய்வேன்? *ஹே மஹி*—அம்மா பூதேவியே!, *தை: தே விப்ரமை: க்ரீதோஸ்மி*—விலக்ஷணமான உனது விலாஸ சேஷ்டிதங்களுக்குத் தோற்றிருக்கிறேன்—என்றானாம் கண்ணன். இதுகேட்ட ராதை ப்ரணயரோஷம் மேலிட்டு, என்பக்கத்திலிருந்துகொண்டே இப்படி அந்யவதூகதாப்ரஸங்கம் பண்ணுகிறாயே! உன்னை என்ன செய்கிறேன்பார்—என்று வெருட்டினளாம். உடனே கண்ணன், ராதே! என்வீணை

ப்ரமிக்கிருய்? அங்யவதூப்ரஸங்க கந்தமுங்கிடையாது; உன்னைப் பற்றியேதான் வாய்வெருவுகின்றேனென்று சொல்லி அந்த வாக்யங்களைத் தான்வியாக்கியானித்தாலும். (எங்ஙனேயென்னில்;) ஹேராதே! த்வந்நயநே பத்மே ஸ்மராமி—உன்கண்களைத் தாமரையாகவே நினைக்கிறேன்; ஹேராதே! ஸததம் மே பாவ: நீலே பவத்குந்தலே முஹ்யதி—எப்போதும் எனது சிந்தனை உனது கரிய கூந்தலிலேயே மோஹங்கொண்டிருக்கிறது. ஹேராதே!, மஹிதை: தே விப்ரமை: க்ரீதோஸ்மி—மிகச்சிறந்த உனது விப்ரமங்களுக்குத் தோற்றிருக்கின்றேன். என்று இங்ஙனே யோஜித்து உரைசெய்து அவளுடைய ரோஷத்தை ஆற்றி விட்டான். இப்போது, பத்மே நீலே மஹி என்பவை விளிச்சொற்களல்ல, ராதையின் கருத்துப்படி விப்ரமங்கள் பூதேவியினுடையவையேயன்றி நீலாதேவியினுடையவையல்ல. கண்ணன் யோஜித்தபடி ராதையினுடையவையாயின. ஆகவே *ரங்க* பதத்திற்கு அஸம்பாவிதமான [ப்ரம மயமான] விப்ரமப்பொருளைக்கூறி, மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிபோடுங் கணக்கிலே அதற்கு ஒரு ப்ரமாணங்காட்டினவிதனுல் தேசிகன் திருவுள்ளம் உகக்குமா? என்பதை அந்தேவாஸிகள் நேரில் கேட்டுணரவேணும்.

துஷ்யதுங்யாயேந ''தே விப்ரமை: க்ரீதோஸ்மி'' என்றது நீலையை நோக்கிச் சொன்னது என்றே வைத்துக்கொண்டாலுங்கூட இதனுல் (ரங்கேச) என்பதற்கு நீலாபதியென்று அர்த்தம் கிடைத்துவிடுமா? என்பதையுங் கேட்டுணரவேணும். 'துஷ்கரம் க்ருதவாந் ராம:'' எகிற ஸ்ரீராமாயன ச்லோகத்தை (துஷ்கரம் குருதே ராம:) என்ருக்கி (துஷ்க—ரங்கு—ருதே) என்று பிரித்தும், ''அத்ரபூர்வம் மஹாதேவ;'' என்பதை (அத்ரபூரு! அம்மஹாதேவ:) என்று பிரித்தும் விபணி பௌராணிகர்கள் விளம்பிப் போதைப்போக்குவதுண்டு. புனிதமான திவ்யஸூக்திகளில் கைபோனபடியும் மனம்போனபடியுமெழுதிவைத்து ''ரஸிகர்கள் கேட்டு உகந்து ஏடுபடுத்தச் சொன்னுர்கள்'' என்றெழுதிவைப்பது மஹத்தான ஸாஹஸம். மனமார்ந்த விப்ரலம்பம்.

அனைவருமறிந்த பலவிஷயங்களைத் தலைகீழாக எழுதுவதோ அபரிமிதம்.

> ''ப்ரபந்ந ஜநகூடஸ்தரான நம்மாழ்வார் ஸ்ரீரங்கநாத
> பாதுகையின் ஸ்ரீசடாரியென்கிற திருநாமம் பெற்றவர்'' (பக்கம் 7)

என்றெழுதியுள்ளார். என் தாயார் ஆசாரியன் திருவடிகளையடைந்தாரென்பதற்கு பதிலாக ஆசாரியர் என் தாயார் திருவடிகளையடைந்தார் என்பது போன்றதல்லவா இது. இந்த பாதுகா ஸஹஸ்ரத்திலேயே தேசிகன் பாதுகையை நோக்கி ''நீ நம்மாழ்வார் திருநாமத்தை வஹிக்கிருய்'' என்று அஸக்ருத் அருளிச் செய்துள்ளார். நாம் மருண்டு சொல்லுவதுமில்லை, ஸ்வேச்சையாகச் சொல்லுவதுமில்லை, கேண்மின்.

ஸமாக்க்யாபத்ததியில் (26) ''யஸ்ஸப்தபர்வ வ்யவதாநதுங்காம்'' என்னும் சுலோகத்தில் ''தஸ்யாபி நாமோத்வஹநாத்'' என்றும் (27ல்) ''பதாவநி! சடாரிபதம் பிபர்ஷி'' என்றும், (28ல்) ''தஸ்யாபி நாமவஹநாத் மணி பாதுகே! த்வம்'' என்றும் நிஸ்ஸந்தேஹ விபர்யயமாக ஸ்வாமியருளிச் செய்திருக்க, பாதுகையின் பெயரை ஆழ்வார் வஹித்தார் என்பது ''என் பெயரைத்தான் எவ்வுள்கிடந்தான் வஹிக்கிருர் என்னுமாபோலேயில்லையா? இங்கு ஒரு மருமமுணர்த்துகிறேன். வைகாநஸர்கள் ஆழ்வாரிடத்தில் ப்ரதிபத்தியற்றவர்கள். அவர்களைச் சிலர் கேட்டார்கள்—''பாஞ்சராத்ராலயங்களில் திருவடி நிலையை சடகோபனென்று வழங்குவது ஒக்குப்; நீங்கள் ஏதுக்கு அந்தவ்யவஹாரத்தை ஆதரிக்கிறீர்கள்?'' என்று அதற்கு அவர்கள் ஒன்றும் சொல்லமாட்டாமல், ''பெருமாள் திருவடிக்கே சடகோபமென்று; பெயர்; இது ஆழ்வாருடைய பெயரன்று; எங்கள் ஆகமத்தில் இப்படி சொல்லியிருக்கிறது''

என்று பேசத்தலைப்பட்டார்கள். இது தேசிகன் திருச்செவியில் விழுந்தபடியால் இந்தப் புரளியைக் கண்டிப்பதற்காகவே ஸமாக்யா பத்ததியை இட்டருளினர்: பாதுகாஸஹஸ்ரமே இதற்காக என்றும் சொல்லலாம். "சடாரிபுரேக ஏவ கமலாபதி திவ்யகவி:" என்ற எறும்பியப் பாவின் ஸ்ரீஸூக்திப்படியும், "தேவிற் சிறந்த திருமாற்குத் தக்க தெய்வக் கவிஞன், பாவிற் சிறந்த திருவாய்மொழி பகர்பண்டிதனே" என்ற கம்பர் வாக்குப்படியும், மற்றும் ஸ்ரீமதுர கவிகள் ஸ்ரீமந்நாத முனிகள் போல்வாருடைய ஸித்தாந்தப்படியும் நம்மாழ்வார்க்கு மேற்பட்ட பகவத் பக்தரில்லாமையாலே அவருடைய திருநாமத்தை எம்பெருமானுடைய திருவடி நிலைக்கு மருமமறிந்து மஹாசார்யர்கள் நாமமறியாத காலத்தில் இட்டிருக்கிறார்கள்.

இதுதவிர, அடியேன் சேமித்துவைத்திருக்கும் புதைபொருளொன்றையும் பகர்கின்றேன்; திருவாய்மொழி எட்டாம்பத்தில் ஏழாம்பதிகத்தின் முதற் பாசுரத்தில் ஆழ்வார் தாமே அந்த ரங்கமாகத் தெரிவித்தருளியிருப்பதொன்றுண்டு; "இருத்தும் வியந்தென்னைத் தன் பொன்னடிக் கீழென்று, அருத்தித்தெனைத்தோர் பல நாளழைத்தேற்கு... ....என்றன் கருத்தையுற வீற்றிருந்தான்" என்ற பாசுரம் பவிஷ்யத்ஸூசகமென்பர் பெரியோர். ஆழ்வார் எம்பெருமானை நோக்கி "பிரானே! என்னை உன் திருவடிக்கீழ் (பிரியா நிலையாக) வைத்துக்கொள்ளவேணு" மென்று நெடுநாள் பிரார்த்தித்ததாகவும் எம்பெருமான் அப்படியே தலைக்கட்டி வைத்த தாகவும் இதில் முத்திரையிட்டு வைக்கப்பட்டது. எதுவும் வேண்டா; தேசிக திவ்யஸூக்தி போதுமே. ரங்கநாதபாதுகைக்கு இருந்தபெயரை ஆழ்வார்க்கு இட்டதாக ப்ராமாணிகமான ஒரு வசனம் காட்டுவரா இவர்? "தமிழ்ப்பிரபந்தங்களுக்கு வேதங்களுக்குப்போல் முழு ஸ்வாதந்த்ரியம் வந்துவிடுமென்று நினைக்கவேண்டா"மென்று அஸ்தானே அஸங்கதமாக ஸ்ரீமதாண்டவன் ஷஷ்டியப்தபூர்த்திமலரில் எழுதிவைத்துத் திணறினவர்க்கு இதுவியப்பன்றே.

அந்த விசேஷம் இதன் அநுபந்தமாக மேலே வெளியிடப்படும்.

# பாதுகா ஸஹஸ்ரத்தின் ப்ராதுர்ப்பாவ விமர்சம்

*"தண்டதரஸ் ஸர்வோபி ம்ருகயு"* என்ற ரீதியிலே பாதுகாஸஹஸ்ர அவதாரத்தைப் பற்றி ஏதேனும் குத்ஸிதமாக எழுதிப் பரிபவப்படாத பண்டிதர்களை இவருடைய வகுப்பில் தேடிப்பிடிக்கவேணும். ஒருவரெழுதினபடி மற்றொருவரெழுதாமல் வெளுப்புக் காகிதத்தைக் கறுப்பாக்கிக்கொண்டு வருகிறார்கள். சரித்திரமெழுதுபவர்கள் பழைய நூல்களில் தாங்கள் கண்டபடியோ, கர்ணபரம்பரையில் கேட்டபடியோ எழுதுவதாக ப்ரதிஜ்ஞை செய்து அங்ஙனே எழுதிப்போருவது விவேகிகளின்வழி. பூசினிக்காய்த் திருடன் கதை சொல்லுகிற கணக்கிலே 'அப்படியிருக்கலாம் இப்படியிருக்கலாம்' என்று லாம்போடுவது அசட்டுத் தனத்தையும் அப்ராமாணிகத்வத்தையுமே காட்டிநிற்கும். (பக்கம் 2ல்) எழுதுகிறார்—"தேசிகன் உத்தமாதிகாரியாயிருக்கையாலே இவரும் பாதுகையைத் துதிக்கவேண்டும் என்று சிலர் ஆசைப்பட்டிருக்கலாம்." (இதுவொரு லாம்; மற்றும் லாம் கேளுங்கள்;) 'இவருடைய கவிதார்க்கிகஸிம்ஹபிருதத்தை அபஹரிக்கலாமென்று நினைத்திருக்கலாம்' "இது ஸ்ரீவைஷ்ணவாபசாரத்தில் முடிகிறதேயென்று தேசிகன் நினைத்திருக்கலாம்" இந்த வாக்கியத்தை "இது ஸ்ரீவைஷ்ணவாபசாரத்தில் முடியலாமென்று தேசிகன் நினைத்திருக்கலாம்" என்றெழுதினால் இதில் இரண்டு லாம் தேறலாம். லஜ்ஜையில்லாமல் இப்படியெழுதிக் கொண்டுபோவது ஆச்சரியமாயிருக்கலாமென்று சிலர் நினைக்கலாமென்று சிலர் கருதலாம். ஆனால் இவர்களிடத்து எதுவும் ஆச்சரியமல்லவென்னலாம்.

கவிதார்க்கிகஸிம்ஹபிருதத்தை யபஹரித்துவிடுவதாவது என்ன ஸ்வாமீ! என்று வினவினால் திசைமுகனுக சேவை ஸாதிக்கலாம். இக்காலத்தில் ஒருவர் பூர்வ தேசிகனென்றும், மற்றொருவர் அபரதேசிகனென்றும், இன்னொருவர் பூர்வாபரதேசிகனென்றும் விருதுகள் வஹிக்கிறார்களே, இதையெல்லாம் அபஹரிக்கவேணுமென்று யாரேனும் நினைப்பாருளரோ? ஸ்வாமி நெடுங்காலம் ஹயக்ரீவோபாஸனைபண்ணி "ஜிகீஷதோ மே கவிதார்க்கிகேந்த்ராந் ஜிஹ்வாக்ரஸிம்ஹாஸநம் அப்யுபேயா:" என்று ப்ரார்த்தித்து அருந்தவப் பயனைப் பெற்ற அந்த விருதை அபஹரித்துவிட நினைப்பாருமுளரோ? அபஹரிக்கத்தான் முடியுமோ? அபஹரிப்பதென்றால் என்ன அர்த்தம். அபஹரித்துவிட்டால் அதனால் ஸ்வாமிக்கு என்ன நஷ்டமோ? ஐயோ! அபஹரித்துக்கொண்டுபோய்விட்டார்களே! என்று கதறியழுவரோ? போலீஸில் எழுதிவைத்தால் மீட்டுக்கொடுக்கமாட்டார்களோ? "ஸம்பாவநா யஸ்ய ஹி காலகூட:" என்பது ஒருபுறத்திலே; இந்த கிரீடத்தைப் பறித்துக்கொண்டு போய்விடுவார்களோ! என்று ஏங்கி அலமந்து நைந்து உளைந்திருந்ததாக மற்றொரு புறத்திலே, இப்படிப்பட்ட வ்யாஹத பாஷணங்களெல்லாம் "அன்னை முனிவதும் அன்றிலின் குரலீர்வதும்......பின்னைமணாளர் திறத்தமாயின பின்னையே" என்று கலியனருளிச் செய்த கணக்கிலே புதுத் தெய்வங்கொண்டாடப் புறப்பட்டபின்னையே,

இவர் தமது முன்னுரையில் D. T. ஸ்வாமியும் இதற்கு ஒரு வியாக்கியானமிட்டார் என்கிறார். அது பட்டபாடு அப்போதே நமது அம்ருதலஹரீ நேயர்களுக்கு விளங்கிற்றென்பதையும் இவர் அறியாதவரல்லர். அறியாதவர்களும் அறிய அதைச்சிறிது அநுவதிக்கிறோம். "ஒரு சிறந்த நூலுக்கு வ்யாக்யானமியற்றப் புகுந்தால் இந்நூல் எதற்காக அவதரித்தது? எங்ஙனே யவதரித்தது? இதன் பெருமை எப்படிப்பட்டது—இத்யாதிகளை ஸம்க்ஷேபமாகவாவது காட்டி அவதாரிகை யெழுதவேண்டும். அவதாரிகையில்லாத வியாக்கியானம் எங்கும் கண்டதில்லை, D. T.யின் உரையில் அவதாரிகை யென்பது எள்ளளவும் கிடையாது; தொடங்கும்போதே ச்லோகமும் பதவுரையுமேயுள்ளது. இந்த பாதுகாஸஹஸ்ரத்திற்கு ஏற்கனவே வியாக்கியானம் செய்துள்ளவர்களும், ப்ராமாணிகர்களாகத் தேசிக சரித்திரமெழுதினவர்களும் இந்த ஸஹஸ்ரம் அவதரித்ததைப் பற்றி ப்ராமாணிகமான அவதாரிகை எழுதியிருக்கிறார்கள்; அதற்கு நேர் விபரீதமான கட்டுக்கதையை நவீநர்கள் எழுதிப் பரிபவமடைந்தொழிந்ததனால் அந்த கட்டுக்கதையை அவதாரிகையாகத் தாமும் எழுதிவைக்க இஷ்டப்படாமையாலும். பூர்வ வ்யாக்யாதாக்கள் எழுதின ப்ராமாணிகமான அவதாரிகையை இவர் தாமும் எழுதி வைத்தால் அது ஸயூத்ய ஸங்கேத விருத்தமாகுமாதலாலும் ஒரு விதமான அவதாரிகையும் எழுதாமலேபோவது நலமென்று கருதி (இவ்வுரைகாரர் D. T. T.) அவதாரிகையெழுதும் பணியில் கை வைத்திலர்; ஆனால் அந்த அஸம்பத்த கதையை அவ்வுரைகாரர் ஆரம்பத்தில் எழுதவில்லையே யொழிய ஏழாவது ச்லோகம். எட்டாவது ச்லோகம் இவற்றின் உரையில் விரிவாகவே யெழுதியுள்ளார். 'இடையில் ஒரு மூலையில் எழுதிவைத்தால் யார் பார்க்கப் போகிறார்!' என்று எண்ணினர் போலும்.

பாம்பு எங்கு மறைந்திருந்தாலும் கருடனது கண்ணில்படாமலிருக்குமோ? கண்ணபிரான் சரிதையில் வத்ஸாஸுரனும் கபித்தாஸுரனும் பரஸ்பரம் மோதி மாய்ந்ததுபோல இவர்களெல்லாரும் பரஸ்பரம் மோதிக்கொண்டு முடிகிறார்களந்தோ! கன்றையும் வினவையும் மாய்த்த அந்த விநோதத்தை யாரும் கண்டாரில்லை. இங்குக்காண்மின். பாரோரறியப் பகர்கின்றேன்.

பாம்பே நிர்ணயஸாகர காவ்யமாலா ஸ்ரீஸில் பூர்வ வியாக்கியானத்தோடு பதிப்பிக்கப்பட்ட பாதுகாஸஹஸ்ரத்தில் காஞ்சீபுரம் சாமாதிருமலை தாதாசாரியருடைய பூமிகையொன்று

சேர்க்கப்பட்டிருக்கின்றது. அதில் எழுதப்பட்டிருப்பதாவது—"பிள்ளை லோகாசார்யருடைய ஸஹோதரரான வாதிகேஸரியென்பவர் தாம் பெற்றிருந்த விருது காரணமான செருக்கினாலும் பொறாமையினாலும் க்வித்வ விஷயத்தில் ஸ்பர்த்தை கொண்டதனால் பாதுகாஸஹஸ்ரம் அவதரித்தது" என்று. ந்யாய பரிசுத்தி அச்சிட்டபோது அதற்கு பூமிகையெழுதின திருவயிந்திரபுரம் சதாவதானம் ஸ்ரீநிவாஸாசாரியரும் அதைப் பார்த்து அப்படியே எழுதிவைத்தார், இவ்விருவருடையவும் மருள் அப்போதே நம்மால் தொலைக்கப்பட்டொழிந்தது. வாதிகேஸரியென்பவர் பிள்ளை லோகா சார்யருடைய திருத்தம்பியாரல்லர். அவர் உத்தமாச்ரமி; திருவாய்மொழிக்குப் பன்னீராயிரவுரை அருளிச்செய்த அழகிய மணவாளச் சீயரே வாதிகேஸரியென்பவர் அவர் தேசிகனுக்குப் பதினேழுபிராயம் பெரியவர் தேசிகன் தம்முடைய த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளிக்குப்பெரி யவாச்சான் பிள்ளையின் இருபத்து நாலாயிரப்படியை உபஜீவித்கதுபோலே வாதிகேஸரியின் பன்னீராயிரப்படியையும் உபஜீவித்திருக்கின்றாரென்பது விரிவாக ஸமர்த்திக்கப்பட்டுள்ளது.

இதையெல்லாங்கண்ட அட்வகேட் D R ஐயங்கார் தாம் புனைந்தவொரு தேசிக சரித்திரத்தில் வாதிகேஸரியைவிட்டு, பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் தேசிகனோடு ஸ்பர்த்தையிட்டதாக எழுதிவைத்தார் அதுவும் உத்பன்னவிநஷ்டத்தில் சேர்ந்தொழிந்தது அதைக் காபியடித்த D T ஸ்வாமிக்கும் அதுவேயாயிற்று. நவீன கற்பனைகளிலும் விவாதங்களிலும் தலையிடாத முன்னோர்கள் எவ்விதமாக எழுதியுள்ளார்களென்னில்; கொட்டயாசாரியார் பணித்ததாக வெளிவந்துள்ள வைபவப்ரகாசிகையில் (ச்லோ. 114) ஸம்ப்ரார்த்திதஸ் ஸம்ஸதி ஸூரிவர்யை: பாதாவநீம் ரங்கபதேர் நிசாயாம்; என்று. வித்வான்களின் வேண்டுகோளுக்கிணங்கிப் பாதுகா ஸஹஸ்ர மருளிச் செய்தாரென்றது. ஆசார்யசம்பூகாரர் யாரோவொரு ஆசு கவி வந்து ஸ்வாமியோடு ஸ்பர்த்தையிட்டதனால் பாதுகாஸஹரம் தோன்றிற்றென்றார். பாரத்வாஜ ஸ்ரீநிவாஸாசார்யரென்பவர் பாதுகா ஸஹஸ்ரத்திற்கு வ்யாக்யான கர்த்தா; அவர் எவ்விதமாக எழுதி வைத்திருக்கிறாரென்னில்; அந்த வியாக்கியான ஆரம்பத்தில், "ரங்கஸ்தாநீ ரஸிகபரிஷத் ப்ரேரணம் ப்ராப்ய சௌரே: பாதா வந்யா: ஸ்துதிமக்ருத யோ யைஸ்ஸஹஸ்ரேண பத்யை:" என்கிற ச்லோகத்தை முன்னமெழுதிவிட்டு உடனே வசனமாக "ஸ்ரீமான் வேங்கடநாதோ குரு: பகவதோ ரங்கநாதஸ்ய திவ்யாஸ்தாநரஸிகைர் பாகவதை: அப்யநுஜ்ஞாதபாதுகாஸ்துதி: பாதுகாஸஹஸ்ரம் நாம காவ்யம் ப்ரணிநாய" என்றெழுதியுள்ளார். ஸ்ரீரங்கத்திலிருந்த ரஸிகர்கள் ப்ரேரணை பண்ண அதன்மேல் பாதுகாஸஹஸ்ரமருளிச் செய்ததாக ச்லோகத்திலுள்ளது; அந்த ரஸிகர்களின் அநுஜ்ஞையைக் கொண்டு (அது) அருளிச் செய்ததாக கத்யத்திலுள்ளளது. ப்ரேரணையும் அநுஜ்ஞையும் பர்யாயமன்று. ஒரு காரியத்தில் ப்ரவர்த்திக்கச் செய்வது ப்ரேரணை. ஸ்வயம் ப்ரவ்ருத்தரானவரை அநுமதிப்பது அநுஜ்ஞை. இது ஸம்ஸ்க்ருதஜ்ஞர்களின் கோஷ்டியில் நிர்விவாதமான விஷயம். இதை எப்படியாவது பொருந்தவிட்டுக் கொள்வோம். ப்ரயாஸமொன்றுமில்லை. யாரும் போட்டியிட்டதுகிடையாதென்றும், தேசிகன் தாமே தமது கைங்கரியமாகப் பாதுகாஸஹஸ்ரமியற்றியருளத் தொடங்கினார்; அதை மஹான்கள் ஆமோதித்தார்கள்—என்றும் இவ்வளவே தத்துவமாய் முடியும். இது தேசிகனுடைய ஸொந்த ஸ்ரீஸூக்திக்கும் பொருந்தும்; (அதாவது) பாதுகாஸஹஸ்ரத்தினுள்ளேயே நாதபத்ததியில் (41) "ப்ரக்க்யாதாநாம் பரிஷதி ஸதாம் காரயித்வா ப்ரதிஜ்ஞாம்" என்றொரு ச்லோகமுள்ளது. இதனால், தேசிகன் தாமே ப்ரஸித்தர்களான ஸத்துக்களின் முன்னிலையில் ஆயிரம் சுலோகம் செய்வதாக ப்ரதிஜ்ஞை செய்து இந்த ஸ்துதியை இயற்றினதாக ஸ்பஷ்டமாகிறது. இவ்விடத்து வியாக்கியானத்திலாவது முன்னோர்கள் ஏதாவது எழுதியிருக்க வேண்டும், ஐதிஹ்ய

மிருந்தால் எழுதாது விட்டிருப்பார்களோ? எந்தவிதத்திலாவது மஹாசார்யர்களைப் பிடித் திழுத்து அபசாரப்பட வேணுமென்கிற நினைவுதான் இந்த கோஷ்டியார்களுக்குள்ளது.

இவர்களுடைய கோஷ்டியில் நெடுநாளாகவே ஒரு பழக்கமுள்ளது; (அதாவது) ஸர்வதா அஸம்பத்தமான கதைகளைக் கைபோனபடி யெழுதி வைப்பது; அது ஸர்வாத்மநா அஸங்கதமென்று நிபுண நிரூபணம் வெளிவந்தால் வாய்திறவாமல் வாளா கிடப்பது; மற்றொரு காலத்தில் வேறொருவர் அந்த அஸம்பத்த கதையையே பிரசுரம் செய்யத் தொடங்குவது, புநர் முத்ரணம் பண்ணுவது; சில பாமரர்களாவது வஞ்சிக்கப்பட்டு இதையே பரமார்த்த மென்று கொள்ளட்டுமே யென்று கருதுவது......இப்படியாக இந்த கோஷ்டியார் பழகிவருகிறார்கள். இதெல்லாம் இவர்கள் தேசிகனோடு புதிய வுறவு கொண்டாடத் தொடங்கின காலத்திலிருந்தே தோன்றிய தடுமாற்றங்களென்று திண்ணமாகவெண்ணுவோர் நிபுணநிரூபகர்கள். உபபத்தி களோடு கூடிய ப்ராமாணிகார்த்தங்களை எவ்வளவு காட்டினாலும அந்தகர்களாகவேயிருந்து விட்டுத் தங்கள் திரளில் கற்பனை செய்து வைத்துக்கொண்டிருக்கிற தப்புக் கதைகளையே மாறிமாறி யெழுதி வெளியிட்டுக்கொண்டு பரிபவங்களையும் அப்போதைக்கப்போது புதுப் பித்துக்கொள்ளுமிவர்கள் இவ்வுலகுக்கு ஒருவாறு மஹோபகாரகர்களே"—ஆக இவ்வளவும் D. T. ஸ்வாமியைத் தெளிவிக்க அக்காலத்தில் அம்ருதலஹரியில் வெளிவந்து உலகம் பரவினவை.

இதையெல்லாங்கண்ட இவர் (இவரென்றால் எவர்? இப்போது பரிவட்டங் கட்டிக்கொண்டு நிற்கிறவர்) அப்படியிருக்கலாம், இப்படியிருக்கலாம், எப்படியுமிருக்கலாம் என்கிறவிவர் போட்டி போட்டி என்கிறார், ஸயூத்ய கலஹமென்கிறார். போட்டியென்கிற ஆபாஸச்சொல்லை எந்த ஸம்ப்ரதாய க்ரந்தத்திலாவது கண்டிருக்கிறீர்களா? புனிதமானவொரு நூல் இப்படியா ம்லேச்சவாங்மலினமாகவேணும்! "க்வசந ரங்கமுக்யே விபோ. பரஸ்பர ஹிதைஷிணும் பரிஸரேஷு மாம் வர்த்தய" (அபீதிஸ்தவே) என்று ஸ்வப்ரார்த்தித ஸஹவாஸர் களாய் ஸ்வசிரோபூஷணீக்ருத பாதாரவிந்தர்களாயிருந்த ஸ்ரீரங்கவாஸிகளின் திருவடிகளில் தேசிகனை அபசாரப்படுகிறவர், த்விதியப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமி பணித்த தேசிகவைபவத் தோடு சிறிதும் பொருந்தாத கட்டுக்கதைகளாலே ஒரு பாமரனும் வஞ்சிக்கப்படமாட்டா னென்று உணரமாட்டாதவர் இந்த 1971ஆம் வருஷத்திலும் வாழ்வது, "நாவலம் பெரிய தீவினில்வாழும் நங்கைமீர்களிதோரற்புதங்கேளீர்" என்று பெரியாழ்வார் ஸாதித்த அற்புதத்திற் காட்டிலும் மிக்க அற்புதமே. இதுபோன்ற அற்புதங்கள் பலபல வருமோ?

பாதுகாஸஹஸ்ரத்தின் உபக்ரமம் (ஸந்த:) என்பது. இதில் தேசிகாபிமதமான திவ்யார்த்தத்தை வெளியிட இவர் மறந்தாலும் நாம் வெளியிடுகிறோம். ஸ்வாமி தேசிகன் தான்பணித்த ந்யாஸவிம்சதிக்குத் தானே வியாக்கியானமிடத் தொடங்கினபோது "ஸ்வயம் வ்யாக்ரியதேஸ்மாபி: திங்மாத்ரேண ஸதிச்சயா" என்றார். இதற்கு D. T. ஸ்வாமியின் வியாக்கியானம் "*ஸதிச்சயா* என்றது பெரியவாச்சான் பிள்ளையின் விருப்பத்தினால் என்றபடி என்றுள்ளது, தேசிகன் பெரியவாச்சான் பிள்ளையைத் தான் ஸத்புருஷராக விவக்ஷிப்பதென்று முடிந்திருக்கிறது. அசற்கிணங்க நியாஸவிம்சதி தொடங்கும்போதே (ஆசார்ய லக்ஷணம் சொல்லுகிற முதல் சுலோகத்தில்) *ஸித்தம் ஸத்ஸம் ப்ரதாயே* என்றார். பெரியவாச்சான் பிள்ளையின் ஸம்ப்ரதாயத்தில் ஸித்திபெற்றவரையே ஆசாரியராகவரிக்கவேணுமென்று தேசிகன் திருவுள்ளம்பற்றினதைப் பின்புள்ள பெரியார்கள் கண்டறிந்து வியாக்கியானித்துள்ளார்கள். ப்ரக்ருதே *ஸ்ரீரங்கப்ருத்வீச சரணத்ரரணசேகரா: ஸந்த:* என்றவிடத்திலும் பெரியவாச்சான் பிள்ளையேயன்றோ ஸத்பதவிவக்ஷிதராகவேணும். (ரங்க) என்பதற்கு நீளையென்று பொருள் என்பவர்க்கு இத்தகைய அரும்பெரும்பொருள்தோன்ற வழியேது? திடீர் தீடீரென்று எந்த

இடத்தையெடுத்து வாசித்தாலும் அபார்த்தமொழிய வேறில்லையே. இருளும் மருளுமே வடிவெடுத்த மற்றுஞ்சில இடங்களை யெடுத்துக்காட்டி நிற்கின்றேன்.

ஸமாக்க்யாபத்ததியில் இரண்டாவது சுலோகம் அற்புதமானது,

மிக அற்புதமானது. சுலோகத்தைக் கேளீர்—

"த்ரமிடோபநிஷந்நிவேச சூந்யாநபி லக்ஷ்மீரமணாய ரோசயிஷ்யந்
த்ருவமாவிசதிஸ்ம பாதுகாத்மா சடகோப: ஸ்வயமேவ மாநநீய"

ஸ்ரீரங்கநாதபாதுகை நம்மாழ்வாருடைய திருநாமத்தை வஹித்திருப்பதுபற்றி ஸ்வாமியின் விலக்ஷணப்ரஜ்ஞா விசேஷ விஜய த்வஜமான உத்ப்ரேக்ஷை இதில் உள்ளது. இது உத்ப்ரேக்ஷையென்று காட்டுவதற்காகவே (உத்தரார்த்தத்தின் முதலில்) *த்ருவம்* என்று ப்ரயோகித்தார். "மந்யே சங்கே *த்ருவம்* ப்ராயோ நூநமித்யேவமாதிபி:, உத்ப்ரேக்ஷா வ்யஜ்யதே சப்தை ரிவசப்தோபி தாத்ருச:" என்கிற ஆலங்காரிக ஸமயத்தின்படி உத்ப்ரேக்ஷா லிங்கமாகவே இங்கு *த்ருவ*மென்பதை ப்ரயோகித்தபடி. கோதாஸ்துதியில் "ப்ராயேண தேவி பவதீவ்யபதேசயோகாத் கோதாவரீ ஜகதிதம் பயஸா புநீதே" என்ற ச்லோகத்தில் தாம் செய்தருளின உத்ப்ரேக்ஷைக்கு லிங்கமாக (*ப்ராயேண*) என்று ப்ரயோகித்தது போலவே இங்கு (த்ருவம்) என்று ப்ரயோகித்தார். அங்கு என்ன உத்ப்ரேக்ஷையென்றால் "ஹம்ஸகாரண்டவாகீர்ணாம் வந்தே கோதாவரீம் நதீம், க்ஷிப்ரம் ராமாய சம்ஸ த்வம் ஸீதாம் ஹரதி ராவண:" என்று கோதாவரியை நோக்கிப் பிராட்டி வேண்டியிருந்தும் ராவணபயத்தினால் வாளாவிருந்ததனால் அவத்யம்பெற்ற அந்த கோதாவரி (கோதா) என்கிற ஆண்டாளுடைய திருநாமம் தன்பால் சேரப்பெற்றதனால் புனிதத் தன்மையையடைந்தது—என்றவிது உத்ப்ரேக்ஷை. இதேபோல, த்ரமிடோபநிஷந்நிவேச சூந்யாநபி என்கிற ப்ரக்ருத ச்லோகத்திலும் உத்ப்ரேக்ஷையே. பாதுகை ஆழ்வார்பெயரை வஹித்ததோடு நில்லாமல் எல்லார் தலையிலும் ஸ்பர்சிக்கவும் பெறுவதனால் தம் திருவுள்ளத்தில் தோன்றிய விலக்ஷணமானதொரு அபிஸந்தியை சமத்காராதிசயம் பொலிய வெளியிடுகிறாரிதில். எம்பெருமான் ஆழ்வார் ஸம்பந்தமில்லாதவர்களுக்கு முக்தியளிப்பதில்லையென்று ஒரு ஸங்கல்பம் செய்து கொண்டானும்; என்றைக்கோ வீடு பெற்ற ஆழ்வாருடைய ஸம்பந்தம் திருவாய்மொழியோதும் முகத்தால்தானே கிடைக்கக்கூடும் ஆக, திருவாய்மொழியோதினவர்களுக்கு மட்டுமே மோக்ஷமளிப்பேனென்று எம்பெருமான் ஸங்கல்பித்ததாகத் தேறிற்று. இதன்மேல் என்னாயிற்றென்று கேளுங்கள். எம்பெருமானருளைக்காட்டிலும் ஆழ்வாருடைய அருள் மேம்பட்டதென்பது "ஆயிரமின் தமிழ்பாடினானருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே" என்கிற மதுரகவிஸூக்தி ஸித்தமாகையாலே பரமதயாளுவான ஆழ்வார் நினைத்தார்—திருவாய்மொழியோதும் பாக்கியம் கடல்சூழ்ந்த மண்ணுலகில் லக்ஷத்திலொரு பங்குகூடத் தேறாதே; இழப்பவர்களின் தொகைதானே அதிகமாகத் தேறும்; உலகமெல்லாம் இழக்கும்படியாக ஒருஸங்கல்பம் செய்து கொள்வது யுக்தமன்றே, இந்த கொடிய ஸங்கல்பத்தை மாற்றவேணுமென்று நினைத்தார். எம்பெருமான் "நான் ஸத்யஸங்கல்பனாகையாலே என்னுடைய ஸங்கல்பத்தை ஒருகாலும் தளரவிடமாட்டேன்" என்ன, அதன் பிறகு ஆழ்வார் ஒரு உபாயம் செய்யவெண்ணி, எம்பெருமானை நோக்கி, 'பிரானே என்னுடைய ஸம்பந்தமில்லாதவர்களுக்கு முக்தியளிப்பதில்லை யென்றுதானே உனது ஸங்கல்பம; உன்னுடைய ஸம்பந்தத்தை அப்ரயோஜகமாக்கி என்னுடைய ஸம்பந்தத்தை முக்கியமாக்கினாய்; ததாஸ்து, எல்லார்க்கும் என்னுடைய ஸம்பந்தம் வாய்க்கும்படி செய்துவிடுகிறேன்பார்' என்று சொல்லித் தாம் பாதுகையாக வடிவெடுத்து பகவத்ஸம்பந்திகளெல்லாரையும் ஸ்வஸம்பந்திகளாக ஆக்கி [அவரவர்களை ஸ்பர்சிக்கும் முகத்தாலே தம்மோடு ஸம்பந்தம் பெற்றவர்களாக்கி] அவனது ஸங்கல்பம் பழுதுபடாதபடிக்கும் திருவாய்

மொழியோதாதவர்களும் முக்திபெறும்படிக்கும் செய்தருளினர் ஆழ்வார் என்றதாயிற்று. இதனால், ஆழ்வாரே பாதுகையாக வடிவெடுத்தாரென்பதும், "பிராட்டியுமவனும் விடிலும் திருவடிகள்விடாது; திண்கழலாயிருக்கும்" என்கிற முமுக்ஷுப்படி ஸூக்தியின்படியே திருவடியினுடையவும் திருவடியான ஆழ்வாருடையவும் பெருமைஅப்ரமேயமென்பதும், தூய தென்மறைவல்லவர்களுக்கே முக்தியளிக்க எம்பெருமான் திருவுள்ளம் பற்றியிருக்கிறானென்பதுமாகிய பலபொருள்கள் பெறலாகும். இத்தனையருமைப் பொருள்கள் கொண்டுள்ள ச்லோகரத்னத்தைக் காடுபாய்ந்த நீரஸ வாக்கியங்களாலே விரஸமாக்கியிருப்பது சோசநீயம். அவ்விடத்து நவீனவுரையை வாசித்தல் அசட்டுத்தனம் வழியும்.

இதற்குமேல் (28) "பத்யோ தேவி சடகோபமுநிஸ் தவாஸீத் தஸ்யாபி நாமவஹநாந் மணி பாதுகே த்வம்; சேஷீபபூவ யுவயோரபி சேஷசாயீ சேஷம் த்வசேஷமபி சேஷபதே ஸ்திதம் வ:" என்கிற சுலோகம் இன்சுவையே வடிவெடுத்தது. திருவுள்ளப் போக்கைச் சிறிதுமறியாமல் "ஸ்வயமபி லிகிதம் ஸ்வயம் ந ஜாநாதி" என்கிற முறையிலே யெழுதி வைத்திருக்குமுரையை அந்தேவாஸிகளேகண்டு அர்த்தமறியவேணும். உத்தரார்த்தத்தில் "சேஷீபபூவ யுவயோரபி சேஷசாயீ" என்றவிடத்தில் 'சேஷீ-பபூவ' என்று இரண்டுபதமல்ல. சேஷனாக ஆனானென்று பொருள் கொண்ட ஒரே பதம் இந்த ஸஹஸ்ரத்தின் (பாரத்வாஜ ஸ்ரீ) வியாக்கியான உபக்ரமத்தில் "சேஷீபாவோ யத்ர காஷ்டாம் ததாதி" என்றதில் சேஷீபாவ: என்றதை நினைப்பது. ஸர்வசேஷியான ஸர்வேச்வரனை "யுவயோரபி சேஷீ பபூவ" என்பதில் என்ன ரஸமுள்ளது? சேஷோ பபூவ' என்கைதது அபூததத்பாவம் தோற்றுதற்காகவே. அதிசயாதாயகத்வம் சேஷத்வம் என்ற சேஷத்வ லக்ஷணத்தைக் கருதினபடி. இதைப்பற்றித் தனிக் கட்டுரை விரிவாக வெளிவரும். ஸம்க்ஷேபத்தில் திருப்தி பிறவாது.

*முடிவான வார்த்தை:*–இந்த நவீனவுரையைப்பற்றிச் சுருங்கச்சொல்லில், தம் உள்ளத்திற்குப் இன்னதென்று தெரியாதவகையில் எழுதினவை பாதி; ஒருவிதமான ரசமுமில்லாதபடி யெழுதினவை பாதி. இங்ஙனன்றி, அபூர்வமாகவும் ரஸ்யமாகவும் தெரிந்துகொண்டோமென்று உகப்பதற்குரிய விஷயம் நமது கண்ணில் ஒன்று கூடப் புலப்படவில்லையந்தோ!

ப்ராமாணிக வித்வான்கள் விமர்சிக்கவேண்டியதொரு விஷயத்தை ப்ரஸ்தாவித்து இதனைத் தலைக்கட்டுகிறோம். ஸ்ரீராமாயண அயோத்யா காண்டத்தில் "மஹாதே தைவதாயாஜ்யம் ஜுஹாவ ஜ்வலிதேநலே" என்றுள்ள ச்லோகத்தை ஸச்சரித்ர ரக்ஷையிலெடுத்து ப்ரஸங்கம் நடைபெறுகிறது. சிவனுக்கு மஹாதேவனென்று பெயரிருப்பதால் இவ்விடத்தில் அந்த மஹாதேவனே உத்தேச்யனாகிறானே என்றொரு சங்கை கிளப்பப்பட்டது. இங்கு, மஹாதே தைவதாய—என்றுள்ளதேயொழிய (மஹாதே தேவாய) என்றில்லை, ஆகவே சிவனுக்கு ப்ரதீதியுண்டாக ப்ரஸக்தியில்லையப்பா என்று ஒரேவரியெழுதி ஸமாதானம் பண்ணியிருக்கவேணும். மஹாதேவபதம் ஸமஸ்தமாயிருந்தால் தான் சிவனுக்கு போதப் வரும், வ்யஸ்தமாயிருந்தால் வாராது என்றெழுதிவிட்டு, பாதுகாஸஹஸ்ரே ப்ரபாவபத்ததியில் (48.) (ஜநயிது மலமர்க்யம்) என்னும் சுலோகத்தில் (நமதி மஹதி தேவே) என்று சிவனையேயுத்தேசித்துத் தாம் வ்யஸ்த ப்ரயோகம் பண்ணியுள்ளார். பாதுகா ஸஹஸ்ரம் முற்பட்டதா, ஸச்சரித்ர ரக்ஷை முற்பட்டதா என்பது தெரியவில்லை. அது எப்படியானாலும் பரஸ்பரவிரோதம் காண்பது அபலபிக்க முடியாதது. இந்தவுரைகாரர் சங்கையை உத்பாவனம்பண்ணி சாஸ்த்ரீய ஸரணியில் பரிஹாரம் எழுதியிருக்கவேணும். அல்லது ஒன்றுமே யெழுதாமல் ஸ்ரீமத் கம்பீரமாகப் போயிருக்கவேணும். (பக்கம் 85ல்) ஆச்சரியமான ப்ரஸங்கங்களைக் கண்ணுடையார் காணவேணும். "பங்கஜாநி நிசி சந்த்ரபாநுபிஸ் ஸம்யகேவ விகஸந்தி" என்று ஒருவனெழுதினான். பங்கஜங்கள் இரவில் சந்திர கிரணங்களினால் விகஸித்ததாகச் சொன்ன

படி, இங்கு ஒருவர் உரையெழுதினர்—கைரவாணி என்னவேண்டுமிடத்தில் பங்கஜாநி என்றது ''அர்த்தாத் ப்ரகரணால் லிங்காத் ஔசித்யாத் அர்த்த நிர்ணய:'' ஆகையாலே யோக ரூடியை துர்ப்பலமாக்கி ப்ரகரணப்ராபல்யத்தை யறிவிக்கைக்காக என்று. இதெல்லாம் வித்வான்கள் எழுதக்கூடியதல்ல. அபரதேசிக, பூர்வாபர தேசிகர்கள் எதை வேணுமாலும் எப்படி வேணுமாலும் எழுதலாம் போலும். (பரம் பரஸ்தாத்.)

கீழே பக்கம் 33ல் தெரிவிக்கப்பட்டுள்ள அநுபந்த வியாஸம் வருமாறு:—

# அநுபந்தம்—திவ்ய ப்ரபந்த த்வேஷ நிராஸம்

28—5—1967ல் ஸ்ரீராமாநுஜன் 22ல் வெளியிடப்பட்ட
உத்தமூரர் வியாஸ விமர்சமென்னும் கட்டுரையின் ஒரு பகுதி.

நிகமாந்த குருத்தம திவ்யக்ருபாநிதிலாப ஸமேதிதஹார்ஷமநா:
ப்ரதிவாதிபயங்கரஸூரிரஸௌ விதநோதி முதம் விதுஷாம் ஹ்ருதயே.

கவிதார்க்கிக கேஸரிஸூக்திஸுதாஜலதௌ ஸததம் விநிமக்நமநா:,
ப்ரதிவாதிபயங்கரதாஸ இதம் ப்ரததாதி ரஸாயநமார்யஹிதம்.

''ஸ்ரீமதாண்டவன் ஷஷ்ட்யப்தபூர்த்திமலர்'' என்னும் புத்தகத்தை ப்ரக்ருத ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவக் கமிட்டியார் 20—5—67ல் நமக்குப் பேரன்புடன் அனுப்பி வைத்தார்கள். புத்தகத்தின் தோற்றம் பரம ரமணீயமாயிருந்தபடியாலும் பல பெரியார்களின் கட்டுரைகள் இடம் பெற்றிருந்தபடியாலும் அந்தக் கட்டுரைகளைக் கூடியமட்டில் வாசித்துப் பார்ப்போமென்று ஆசையுடன் வாசிக்கத் தொடங்குகையில் ஸ்ரீ உ. வே. உத்தமூர் வித்வான் ஸ்வாமியின் உபய வேதாந்தமென்னும் கட்டுரை முந்துறமுன்னம் காட்சிதரவே அதனை வாசித்தேன்... ... ... இக்கட்டுரையை நம் ஆண்டவன் கடாக்ஷித்து எங்ஙனம் ஸஹித்திருக்கிறாரென்று தெரியவில்லை. இது அவருடைய கடாக்ஷவீக்ஷணத்திற்கு இலக்காயிராதென்றே நிச்சயித்தேன்.

எழுதுகிறார் உத்தமூரர்—''தமிழ் மறைகளையும் சேர்த்து உபய வேதாந்தம் நாம் கற்க வேண்டுமென்று நாதமுனிகள் தொடக்கமாக நமக்கு உபதேச ஸம்ப்ரதாயம் ஏற்பட்டிருக்கிறது. இதனால் அருளிச்செயல்களுக்கு வேதத்தைப்போல் பூர்ணமான ஸ்வாதந்த்ரியம் கொடுத்ததாகாது'' என்று.

விவேகிகளான வித்வான்களுக்கு விஜ்ஞாபிக்கிறேன். அடியேனுடைய எந்த விமர்சமும் சப்தஸந்தர்ப்பம் அர்த்த ஸந்நிவேசம் ஆகிய இரண்டையும்பற்றியே நிகழ்வதென்பதைப் பண்டிதவுலகம் நன்கறிந்துள்ளது. அர்த்தத்திற்கு முற்பட்டது சப்தமாகையால், சப்த ஸந்தர்ப்பம் அஸங்கதமென்பதை முன்னம் காட்டிவிட்டு, பிறகு அர்த்த சந்நிவேசம் அத்யந்தம் அசம்பத்த மென்பதை மூதலிக்கிறேன். ''அருளிச்செயல்களுக்கு வேதத்தைப்போல் பூர்ணமான ஸ்வாதந்த்ர்யம் கொடுத்ததாகாது'' என்றெழுதியவிவர் எவ்விதமான பொருளை நெஞ்சிற் கொண்டாரோ அந்தப்பொருளுக்குச் சேர வாக்கிய மெழுத வேணுமாகில், ''அருளிச் செயல்களுக்கு வேதத்திற்குப்போல் பூர்ணஸ்வாதந்த்ர்ய முள்ளதாக நினைக்கமுடியாது'' என்றோ, ''அருளிச்செயல்களை வேதத்தைப்போல் பூர்ண ஸ்வாதந்த்ர்ய முடையனவாகக் கொள்ளவொண்ணாது'' என்றோ வேறொரு வகையாகவோ எழுதப்பட்டிருக்கவேண்டும். 'சைத்ரன் மைத்ரனைப்போல் சமர்த்தனல்லன்' என்கிற வாக்யத்தை ''சைத்ர: மைத்ரமிவ ந சமர்த்த:''

என்று மொழிபெயர்ப்பாரைப் போலவே பல வெள்ளைக்காகிதங்களைக் கறுப்பாக்கிக்கொண்டிருப்பார்க்கு இத்தகைய உத்போதனங்களை நாம் பண்ணப் புகுவது 'ஸூசிரமூஷரே வர்ஷிதம்' என்றதோடொக்குமத்தனை. பங்க்திகளை அபாதிதமாக எழுதக் கற்பது தனிப்பட்டதொரு பாக்யமாதலால் அந்த பாக்யம் பெறாதவர்கள் 'ந நிரஸநீயா:, அபிது சோசநீயா'' என்கிற பட்டர் ஸ்ரீஸூக்திக்கட்டளையிலே எண்ணத் தக்கவர்கள். இவர்க்கும் இவரைப் போன்றவர்கட்கும் மேட்டுமடையான தமிழ்ப்பங்க்தி விந்யாச வைகரி கிடக்கட்டும்; இவர்கள் கற்ற ஸம்ஸ்க்ருதத்திலாவது தெளிவு உள்ளதோ வென்று பார்க்கில், அதிலும் சோசநீய ஸ்திதியேயென்பதை ஸ்தாலீபுலாகந்யாயத்தால் ஸ்வல்பமே காட்டிவிட்டு மேலே விஷயத்திற் செல்லுவேன்.

வடமொழியில் உபப்ர்ம்ஹண மென்கிற பதம் அப்ரஸித்தமன்று ஸுப்ரஸித்தம். ☼இதிஹாஸபுராணாப்யாம் வேதம் ஸமுபப்ர்ம்ஹயேத்☼ ☼வேதோபப்ர்ம்ஹணார்த்தாய☼ ☼உபப்ர்ம்ஹித வேதாய☼ இத்யாதிவசனங்கள் அனந்தங்கள். இவ்விடங்களிலும் மற்றும் எவ்விடங்களிலும் ப்ரஹ்மசப்தத்திற்போல் ஹகாரமகார ஸம்யோகம் ஸர்வாத்மநா கிடையாது. கஜகர்ஜிதவாசகமான ப்ர்ம்ஹிதசப்தத்திற்போல ஸம்யுக்தாக்ஷரஸம்பந்த கந்தமுமின்றிக்கே இடையில் அநுஸ்வாரமேயுள்ளது. இதைப்பற்றின தத்துவம் அடியேனுடைய நூல்களில் ப்ரஸங்காத் பலவிடங்களில் விவரிக்கப்பட்டுள்ளதைப் பண்டிதர்கள் கண்டு தெளிவுற்றிருக்கிறார்கள். ப்ரக்ருதம் அடியேன்விமர்சிக்கும் உபயவேதாந்தமென்னும் உத்தமூரர் கட்டுரையில் விவாதாஸ்பத பதம் எத்தனை தடவை ப்ரயோகிக்கப்பட்டுள்ள தென்பதை எண்ணிப் பார்க்க வேணும். அத்தனை தடவைகளிலும் அந்தோ! மருள் மலிந்துள்ளது. ஐந்து அக்ஷரங்களையுடைய உபப்ர்ம்ஹண மென்கிற பதத்தில் (உ. ப. ண.) என்கிற மூன்றெழுத்துக்களில் மருள் புகுவதற்கு ப்ரஸக்தியில்லை. மற்ற இரண்டெழுத்துக்களை ஸம்யுக்தாக்ஷரங்களாகக் கொள்ளும் மருள் இவரையொத்த பண்டிதர்களிடத்தில் பெரும்பாலும் குடிகொண்டிராநின்றது. பவர்க்க-த்ரிதீயத்தின்மேல் ரேப மேறியிருப்பதாகவும், (அடுத்தபடி) ஹகார மகாரஸம்யோகமுள்ளதாகவும் மருண்டிருக்கும் நிலை அந்தோ! இவர்களை இந்த பிறப்பில் விட்டு விலகாது விலகாது. சப்தஸ்வரூபத்தை உணரமாட்டாதது போலவே இதைப் பற்றி நாம் விளக்கியெழுதுவதையும் உணர்ந்து கொள்ள மாட்டாதவர்களுக்கு இன்னமும் பன்னியுரைக்க லஜ்ஜித்து நிற்கிறோம்: இனி விஷயத்திற் புகுவோம்.

ப்ரக்ருதவ்யாஸத்தில்—''இதனால் அருளிச் செயல்களுக்கு வேதத்தைப்போல் பூர்ணமான ஸ்வாதந்த்ர்யம் கொடுத்ததாகாது; இதிஹாஸ புராணங்கள் வேதத்திற்கு உபப்ருஹ்மணங்களாகிறது போல் இவையும் உபப்ருஹ்மணங்களே'' என்கிற வாக்கியம் முன்னம் விமர்சத்திற் கொள்ளப்படுகிறது. இதைக்கண்டவொரு ஸயூத்யர் இவரிடம் வந்து ''நாமெல்லாம் ப்ரபந்தம் கபந்தம் என்று சொல்லிக் கொண்டிருக்க, நீர் புதிதாக அருளிச் செயலென்றெழுத ஆரம்பித்தீரே! இதென்ன? நீரும் ப்ரபந்தரக்ஷை யென்றுதானே போட்டு வருகிறீர்; நம்மவர்களில் யாராவது அருளிச் செயலென்றதுண்டா? ஏதுக்கு இப்படி யெழுதிவைத்தீர்?'' என்று கேட்டதாகவும், ஐயோ! மருமம் உங்களுக்குத் தெரியவில்லையே, '*அலங்க்ர்த்ய சிரச்சேத.*'' என்று ஒன்று நீங்கள் கேள்விப்பட்டதில்லைபோலும்; அந்த ரீதியில் பண்ணின அலங்காரமன்றோ இது'' என்று விடைகூறினாராம். இதனுண்மை நமக்கு நேராகத் தெரியாது; செவிப்பட்ட ப்ரவாதத்தை யெழுதின வத்தனை. உண்மையில் இங்ஙனே சொல்லக் கூடியவரே இவர்.

அருளிச் செயலென்கைக் கீடான ஆதராதிசயம் அந்தரங்க ஸாக்ஷிகமாகவுள்ளதாகில் இங்ஙனே வசனவ்யக்தி வெளிவருதற்கு ப்ரஸக்தியே கிடையாதென்பதை பாலிசருமறிவர். ''பூர்ணமான ஸ்வாதந்த்ர்யம் கொடுத்ததாகாது'' என்கிற இவருடைய அபசப்தத்தை அநுவதிப்

பதும் அபசாரமேயாயினும் கலங்கினவர்களைத் தெளிவிக்க வேண்டியிருப்பதால் எடுத்துக் கழிக்கிறபடி. யாரும் இவரிடத்தில் வந்து "திவ்யப்ரபந்தங்களுக்கு வேதத்தொடொப்பப் பூர்ணமான ஸ்வாதந்த்ர்யம் கொடுக்கவேணும்" என்று பிச்சை கேட்கவில்லை. ஸ்வாதந்த்ர்ய மாவது என்ன? பூர்ணமான ஸ்வாதந்த்ர்யமாவது என்ன? அது வேதத்திற்கு உள்ள விதம் யாது? என்பதை நன்கு உபபாதித்துக் காட்டி விட்டன்றோ 'அது இதற்கில்லை' என்ன வேணும்.

நம்முடைய பூர்வாசார்யர்களின் கோஷ்டியில் திவ்யப்ரபந்தங்களைப் பற்றி மூவகை யான நிர்வாஹங்களைக் காண்கிறோம் 1. வேதஸாம்யம்' 2. வேதோபப்ர்ம்ஹணஸாம்யம். 3. வேதப்ராதுர்ப்பாவ விசேஷாத்மகத்வம்—என்பனவாம் அந்த நிர்வாஹங்கள். ஆசார்ய ஹ்ருதய திவ்ய சாஸ்த்ரத்தில் (39) "எவ்வுலகத் தெவ்வெவையுமென்கையாலே வேதம் பஹு விதம்" என்கிற சூர்ணைக்கு அவதாரிகையிட்டருளுகிற மணவாளமாமுனிகள்—"இனிமேல் ஸந்தங்களாயிரமென்று திருவாய்மொழிக்குச் சொன்ன வேதத்வத்தை ஸாதிக்கக் கோலி ப்ரதமம் ஏவம்விதமா யிருப்பதொரு வேதமுண்டோ வென்கிற சங்கைக்குப் பரிஹாரம் பண்ணுகிறார்" என்றருளிச் செய்ததையும்; மேலே (54.) "அன்றிக்கே ஸ்வரூபகுண விபூதி சேஷ்டிதங்களை விசதமாக்குகிற பஞ்சராத்ரபுராணேதிஹாஸங்கள் போலே நிலபாருபோக்கு தெரியச் சொன்ன வேதோபப்ர்ம்ஹணமென்பர்கள்" என்ற சூர்ணையின் அவதாரிகை—"ஆக விப்படி இப் ப்ரபந்த சதுஷ்டயத்துக்கும் வேதஸாம்யத்தை ஸாதித்தார் கீழ்; இங்ஙனன்றிக்கே இதுதனக்கு வேதோப ப்ர்ம்ஹணஸாம்யமும் சொல்லுவர்களென்கிறார் மேல்" என்றருளிச் செய்ததையும்; மேலே (70) "அதவா வேத வேத்ய ந்யாயத்தாலே பரத்வபரமுது வேதம்'. இத்யாதி சூர்ணையின் அவதாரிகையில்—"ஆக இதுக்குக் கீழ் திவ்யப்ரபந்தத்துக்கு வேத ஸாம்யமும் ததுபப்ர்ம்ஹணஸாம்யமும் உண்டேன்னுமிடத்தை யருளிச்செய்தார்; இங்ஙனன் றிக்கே வேதாவிர்ப்பாவ விசேஷமாய் இவ்வாழ்வாராலே நிர்மிதமாக ப்ரஸித்தமாயிருப்ப தொன்றென்று இதுக்கு இன்னமும் ஒரு யோஜனை பண்ணுகிறார்" என்றருளிச் செய்ததையும் ப்ரமாண சரணர்கள் குறிக்கொள்ளவேணும்.

அன்றியும், இவற்றினிடையில் உபப்ர்ம்ஹண ஸாம்ய மருளிச்செய்தபோது தோன்றின வொரு சங்கைக்குப் பரிஹாரமாக (68) "பாரத கீதைகளின் வேதோப நிஷத்த்வம் போலே இதுவும் வ்யாக்யை யானாலும் வேதரஹஸ்யமாம்" என்றருளிச் செய்த சூர்ணையும் நோக்கத் தக்கது. இதற்கு மாமுனிகளிட்டருளின வியாக்கியானம்—"ஆனால் இத்தை உபப்ர்ம்ஹண ஸமமாகச் சொன்ன பக்ஷத்தில் வேதவ்யாக்யை யாமதொழிய வேத ரூபமிதம் க்ருதம் த்ராவிட வேத ஸங்க்தை: என்று அபியுக்தர் சொல்லுகிற வேதத்வம் இதுக்குக் கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (*பாரத கீதைகளின்*) இத்யாதியில். அதாவது வேதோப ப்ர்ம்ஹணமான மஹாபாரதமும் அதில் ஸாரமான ஸ்ரீகீதையும் வேதாந் அத்யாபயாமாஸ மஹாபாரத பஞ்ச மாந் என்றும் பகவத் கீதாஸூபநிஷத்ஸு என்றும் சொல்லுகிறபடியே வேதமும் உப நிஷத்துமாகிருப்போலே இது வேதவ்யாக்யையான உபப்ர்ம்ஹணமானாலும் வேத ரஹஸ்ய மும் ஆம் வேதரஹஸ்யமாவது வேதத்தில் ரஹஸ்ய பாகமான உபநிஷத்து; கீழச் சாந்தோக்ய ஸமமாக விரேசொல்லிற்று; ஆகையால் இந்த பக்ஷத்திலும் இதின் த்ராவிட வேதத்வஹானி வாராதென்று கருத்து" என்பதாம்.

இனி நிகமாந்த மஹாகுரு ஸாதித்திருப்பதையும் காண்போம். த்ரமிடோப நிஷத்தாத் பர்ய ரத்நாவலி யென்றும் த்ரமிடோப நிஷத்ஸாரமென்றும் திருநாமமிட்டு இரண்டு நூல்க ளருளிச் செய்திருப்பது ப்ரஸித்தம். இதில் உள்ளே யிறங்கி அநுபவிப்பது பிறகு ஆகுக், த்ரமிடோப நிஷத் தென்றே வ்யபதேசித்தருளியிருக்கிறபடியை நோக்குமின். "த்ரமிடோப

நிஷத் த்ரஷ்டு ரஸ்ய மாஹாத்ம்யமத்புதம்'' என்பதும் நிகமாந்த குருஸூக்தி ரத்னம். த்ரமிடோபநிஷத்கர்த்து: என்றோ 'த்ரமிடோபநிஷத் ஸ்ரஷ்டு:' என்றோ சொல்லிற்றிலர். 'த்ரஷ்டு:' என்று சிறப்பாக ஸாதித்தது—பட்டர் ருஷிம் ஜுஷாமஹே என்கிற ச்லோகத்தில் ''ஸஹஸ்ரசாகாம் ய: *அகார்ஷீத்*'' என்றோ 'அஸ்ராக்ஷீத்' என்றோ அருளிசெய்யாமல் "ஸஹஸ்ர சாகாம் த்ராவிடீம் ப்ரஹ்மஸம்ஹிதாம் *அத்ராக்ஷீத்*'' என்றருளிச் செய்திருக்கையாலே அதனை அடியொற்றியே ''த்ரமிடோபநிஷத்த்ரஷ்டு:'' என்று நிகமாந்த மஹா குருதாமும் பணித்தபடி,

வேதத்திற்குள்ள ஸ்வாதந்த்ர்யம் திவ்யப்ரபந்தத்திற்குச் சொல்ல முடியாதென்ற இவருடைய தாத்பர்யம் என்ன வென்பதை ஆர அமர ஆராய வேண்டும். வேதத்தின் ஸ்வாதந்த்ர்யத்தை இவர் எந்த அம்சத்தில் கண்டார்? என்று கேட்போமாயின், ஆர்ஜவத்துடன் விடையளிக்கவேணுமிவர். எம்பெருமானுடைய ஸ்வாதந்த்ர்யத்தைச் சொல்லும் கூரத்தாழ்வான் "ஸ்வாதந்த்ர்யமைச்வரம் அபர்யநுயோஜ்யமாஹு:'' என்றார். அப்படி நியோக பர்யநுயோக அநர்ஹத்வ ரூபமான ஸ்வாதந்த்ர்யம் அவனுக்கிருக்கச் செய்தேயும் அந்தஸ்வாதந்த்ர்யத்திற்கும் பங்கம் வருவதாக ஒரு சங்கையும் அதற்குப் பரிஹாரமும் பட்டர் அருளிச்செய்துள்ளார். "ஸ்வாதீநே ஸஹகாரி காரணகணே'' என்று தொடங்கி 'ஸ்ரஷ்டுஸ் ஸ்ருஜ்யதசாவ்யபேக்ஷணமபி ஸ்வாதந்த்ர்யமேவ ஆவஹேத்'' என்றருளிச் செய்தார். இந்தசங்காஸமாதானங்களை நமது வியாக்கியானத்தில் விரிவாகக்காண்க. இவ்வோ கட்டளைகளிலே திவ்யப்ரபந்தத்திற்கும் ஸ்வாதந்த்ர்யஹானியை இவர் உத்தாபனம் பண்ணுவதனால் ஒரு ஹானியுமில்லை. ஆனாலும் வேதத்திற்குப்போலே திவ்யப்ரபந்தத்திற்குப் பூர்ணமான ஸ்வாதந்த்ர்யம் கொடுக்கப் படவில்லை' என்னுமிவருடைய எண்ணம் எத்தகைத்து! என்பது பரீக்ஷிக்கப்பட வேண்டும்.

கீழே ப்ரஸ்தாவித்த த்ரமிடோப நிஷத் தாத்பர்ய ரத்நாவலியில்—"யத்தத் க்ருத்யம் ச்ருதீநாம் முநிகணவிஹிதைஸ் ஸேதிஹாஸை: புராணைஸ் தத்ராஸௌ ஸத்வஸீம்நச் சடமதநமுநேஸ் ஸம்ஹிதா ஸார்வபௌமீ'' என்று பணித்துள்ள ச்லோகத்தின் கருத்தை இவர் உணரப்பெற்றிருந்தால் அநவஸரமான இந்த . ப்ரஸங்கத்தில் கைவைத்திருக்கவே மாட்டார். ஸ்ரீவைஷ்ணவ ஸந்தானத்திற் பிறந்து வைத்து, பூர்வாசாரியர்களொருவரும் ப்ரஸங்கியாதவொரு விஷயத்தைக் கிளப்பி ஸ்ரீவைஷ்ணவர்களின் மனத்தைப் புண்படுத்துமிவர் .......... இந்த வாக்கியத்தை முடிக்கத் தெரியாமல் திகைக்கிறேன். கோஷ்டீ பஹிஷ்க்ருத: என்று தான் முடிக்கவேணும். இதில் ஸந்தேஹ மென்ன?

☼அநந்தா வை வேதா:☼ என்கிறபடியே அபரிமிதங்களான வேதராசிகள் தாம் சொல்ல எடுத்துக்கொண்ட விஷயங்கள் ஒன்றிரண்டல்ல, பத்தெட்டல்ல, ஆயிரம் பதினாயிரமுமல்ல, [''பாரே ப ரார்த்தம் கணநா யதி ஸ்யாத்.''] அவ்விஷயங்களை விளக்கிக்காட்ட யாரால் முடியும்? ☼ரேதஸ் ஸிஞ்சந், ப்ரஜா: ப்ரஜநயந்☼ என்றும், ☼நக்நங்க்ருத்ய ஊருமுப ப்ரவர்த்தயதி ஊருணுஹி ரேதஸ் ஸிச்யதே, ...அத ப்ரஜா: ப்ரஜாயந்தே. ☼ந மா யபதி கச்சந☼ த்ரிம்சதஸ்யா ஜகநம் யோஜநாநி☼ என்றிப்படிப்பட்ட அரிய பெரிய விஷயங்களை விளக்குவதில் வேதங்களுக்கே பூர்ணமான ஸ்வாதந்த்ர்யமுள்ளதென்றும், இத்தகைய விஷயங்களை யெடுத்துரைப்பதில் திவ்யப்ரபந்தங்களுக்கு ஸ்வாதந்த்ர்ய லேசமும் கிடையாதென்றும் தாராளமாக இசையத் தட்டில்லை. திவ்ய ப்ரபந்தங்கள் வெளியிட விரும்பிய விஷயங்கள் ஐந்தே; அவைதாம் ☼மிக்கவிறை நிலையும் மெய்யாமுயிர்நிலையும், தக்கநெறியும் தடையாகித் தொக்கியலும், ஊழ்வினையும் வாழ்வினையுமோதுங் குருகையர்கோன் யாழினிசை வேதத்தியல்☼ என்கிற திருவாய்மொழித்தனியனிலே விசதம், இவ்விஷயங்களில் திவ்யப்ரபந்தங்களுக்குப் பரிபூர்ண

ஸ்வாதந்த்ர்யம் அப்ரதிஹதம், அவ்யாஹதம், அநபாயம், ப்ரலயேபி அவிசால்யம், அநந்ய ஸாமாந்யம் என்று உத்தமரார் உணரவேணும். உணர்ந்தீரா ஸ்வாமிந்!

இது கேளீர், விவக்ஷிதார்த்தத்தைச் செவ்வனே வெளியிட முடியாதபடி திக்குமுக்க லாடி நிற்பவர்கள் பலருளர். அன்னவர்களில் அநந்யராய் (அல்லது) அந்யதமராய் விளங்குமிந்த வித்வான் "திவ்ய ப்ரபந்தங்களுக்குப் பூர்ணமான ப்ராமாண்யமில்லை" என விவக்ஷித்து அதைச் செவ்வனே வெளியிடத்தெரியாமல் ஸ்வாதந்த்ர்யமில்லை யென்று எழுதிவைத்தாரென் பது உண்மை. ஆக இவரபிப்ராயத்தால் திவ்ய ப்ரபந்தங்களுக்கு பூர்ண ப்ராமாண்யமில்லை யென்பதுதான் வ்யக்தமாக நின்றது. இவரும் இவருடைய வகுப்பினரும் கொண்டிருக்கிற பலபல அபார்த்தங்கள் திவ்ய ப்ரபந்தப் பாசுரங்களினால் வேரறுக்கப்பட்டொழிந்தனவாதலால் இந்த வருத்தத்தைப் போக்கிக்கொள்ள 'திவ்ய ப்ரபந்தங்கள் ஏதோ சில விஷயங்களில் மட்டும் ப்ரமாணமேயொழிய ஸகலாம்சங்களிலும் ப்ரமாணமன்று' என்றெழுதியும் சொல்லியும் காலங்கழிக்க வேண்டியது தலைவிதியாயிற்று. வித்வத் ஸேவா விமலமநஸ்கரான வேங்கடேச மஹாகுரு திவ்ய ப்ரபந்தங்களுக்கு முரணான அர்த்தங்களைப் பேணலாகாதென்று தெளிவித்த வராகையாலே "யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோதோ வகுலாமோதவாஸிதம், ச்ருதீநாம் விச்ரமாயா லம் சடாரிம் தமுபாஸ்மஹே" என்று நம்மாழ்வாரை உபச்லோகித்தார். இதில் "ச்ருதீநாம் விச்ரமாய அலம்" என்று திருவாய்மொழியைப் பற்றப் பணித்தருளினார். இதற்கு அதிச யோக்தியாகவோ ஆரோபணமாகவோ அர்த்தம் சொல்லவேண்டிய ஆவச்யகதையில்லை; திருவாய்மொழியானது வேதங்களை நோக்கி 'நீங்கள் ஏதுக்கு வீணாக ச்ரமப்படுகிறீர்கள்; நீங்களதிகரித்த காரியத்தைச் செவ்வனே தலைக்கட்ட நான் துணிந்தெழுந்த பிறகு நீங்கள் விச்ரமிப்பது நன்று' என்று தெரிவித்ததாக உண்மை தெளிந்து உரைத்தாராயிற்று. இதையே தாத்பர்யரத்நாவளியில் "யத்தத் க்ருத்யம் ச்ருதீநாம்......ஸார்வபௌமீ" என்று விவரித்தருளிச் செய்தார். பாதுகா ஸஹஸ்ரத்தில் "விந்த்யஸ்தம்பாத்......ப்ராசீநாநாம் ச்ருதிபரிஷதாம் பாதுகே பூர்வகண்யா" என்ற ஸ்ரீஸூக்தி யொன்று போதுமே. ச்ருதிபரிஷதாம் பூர்வகண்யத்வம் திவ்யப்ரபந்தத்திற்கு எதனாலே யென்பதைத் தெரிந்து கொள்ள இவர் இட்டுப் பிறந்தவரல்லரே. ஸ்ரீமதாண்டவன் ஸந்நிதியில் தெரிந்து கொள்வது. இதற்கு மேல் இவர் என்ன சொல்லுவார் தெரியுமோ! இங்கெடுத்துக் காட்டிய ப்ரமாணங்கள் எனக்குத் தெரியாதவையோ? இவற்றில் எனக்கு ஏதேனும் விப்ரதி பத்தியுண்டோ? இவற்றில் எனக்கு அநப்யுபகமலேசமுமில்லையே என்பர். பரமவைதிகராயிருந்தவருடைய குமாரரொருவர் பகல் பன்னிரண்டு மணிவரை காதும் பூணூலுமாய் பல்குச்சியிட்டுத் தேய்த்துக் கிடப்பராம்; 'திருத்தகப்பனார் உதயோப ஸ்தானம் செய்து போருவரே, நீர் இப்படியா இருப்பது? என்பார்க்கு அவர் விடை கூறுவராம்; மணி பன்னிரண்டானாலும் உதயோபஸ்தானம் தவறுமா என்ன! என்று. அதுவேதான் இங்கு நினைவுக்கு வருகின்றது.

நாதமுனிகள் முதலான ஆசார்யர்களின் நியமனம் என்று முன்னே யெழுதிவிட்டு, உடனே "இதனால் அருளிச் செயல்களுக்குப் பூர்ணஸ்வாதந்த்ர்யம் கொடுத்ததாகாது" என்றெ ழுதினவிவர் (இதனால்) என்பதற்கு என்ன பொருள் கொண்டாராக வேணும்? என்று விவேகி கள் விமர்சிக்கவேண்டாமா, நாதமுனிகள் முதலானோர் திவ்ய ப்ரபந்தத்திற்கு வேதவத் ப்ராமாண்யம் கொடுத்ததாகக் கருதக் கூடாது—என்பதேயன்றோ இவர் கொண்ட துராக்ரஹப் பொருள். "பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம் ஸர்வார்த்ததம் ஸ்ரீசடகோப வாங்மயம், ஸஹஸ்ரசாகோபநிஷத் ஸமாகமம் நமாம்யஹம் த்ராவிடவேதஸாகரம்." என்கிற தனிய னருளிச் செய்தவர் நாதமுனிகள்; அவரை உபச்லோகித்த நிகமாந்த குரு "நாதேந முநிநா தேந பவேயம் நாதவாநஹம், யஸ்ய நைகமிகம் தத்வம் ஹஸ்தாமலகதாம் கதம்" என்றார்

நாதமுனிகளுக்கு ஹஸ்தாமலகதாம் கதமான நிகமதத்வம் இன்னதென்பதை உள்ளபடி யுணர்வதற்கு இவர் எத்தனை பிறவி பிறக்க வேணுமோ தான்! இதற்குமேலும் இவர் எழுதியுள்ளதெல்லாம் ஜரத்கவாதிவாக்யார்த்தமே.

திவ்யப்ரபந்தங்களுக்குப் பூர்ணமான ஸ்வாதந்த்ரியம் கொடுக்கப்படவில்லை யென்கிறவிவர் தமக்குப் பரிபூர்ணமான ஸவாதந்த்ரியம் எதிலுமுண்டென்று அபிமானித்துக்கொண்டு 'நாம் எதையெழுதினாலும் கேட்பாரில்லை' என்றெண்ணிக் கைபோன போக்கில் எழுதி வருகிறார். விரிவுக்கு அஞ்சாமல் விவரிக்கிறேனெதையும். வேதவ்யாஸ பகவான் ப்ரஹ்மஸூத்ரமியற்றினரென்றெழுதி விட்டு '*இதனையும் வேதாந்தமென்பர்*' என்றெழுதுகிறார். இதுவும் ஒரு மருள். ப்ரஹ்மஸூத்ரத்திற்கு சாரீரக மீமாம்ஸை யென்று பெயர். வேதாந்த வாக்கியங்களை மீமாம்ஸிக்கத் தோன்றியவதற்கு வேதாந்த மென்கிற பெயர் கிடையாது, பொருந்தவும் மாட்டாது. வேதாந்த சாஸ்த்ரம் என்னலாம். அப்போது சாகபார்த்திவஸமாஸமாய் [அதாவது மத்யமலோபீ ஸமாஸமாய்] வேதாந்தார்த்த விசாரபரம் சாஸ்த்ரம் வேதாந்த சாஸ்த்ரமென்றாகக் கடவது. இந்த ரீதியில் யதீந்த்ரமத தீபிகையும் ஸித்தாந்தஸித்தாஞ்ஜனமும் வேதாந்த சாஸ்த்ரமென்னக் குறையில்லை. இவரெழுதுகிற எந்த விஷயமும் சாஸ்த்ரஜ்ஞர் எழுதுவதாகக் காணவில்லையே. அசடுபிசடான வாக்யரசனைகள் கிடக்கட்டும். அர்த்தமெல்லாம் அஸமஞ்ஜஸமாயிருப்பது அத்யந்த சோசநீயம்.

## முடிவுரை

அன்பர்காள்! இக்கட்டுரையானது 28—5—1967ல் ஸ்ரீராமாநுஜன் 22ல் வெளியிடப் பட்டதென்பதை மீண்டும் நினைவூட்டுகிறேன். இது இவ்வளவோடு முடிந்ததன்று. அதிலிருந்து ஒரு பகுதியே இங்கு வெளியிடப்பட்டதிப்போது. இங்ஙனே பலபல கட்டுரைகள் ஸ்ரீமத் உத்தமூர் ஸ்வாமியின் பல வியாஸங்களுக்கு விமர்சமாகப் பல ஸந்தர்ப்பங்களில் அடியேன் வெளியிட்டவையுண்டு. இன்றளவும் ஒன்றுக்கும் விடை வெளிவந்ததில்லை. உத்தமூர் ஸ்வாமியின் பாண்டித்யத்தில் அடியேன் விப்ரதிபன்னனல்லேன். நல்லவுழைப்பாளியே. ஆனால் அடியேன் எடுத்துக்காட்டும் அபப்ரம்சங்களில் ஒன்றுகூட அஸூயாதிகளால் ஆரோபிக்கப்படுமதன்று. ஒவ்வொன்றுக்கும் ஸமாதானம் தெரிந்துகொள்ள வேணுமென்கிற ஆசை தூண்டவே எழுதி வருகிறேன். ஸமாதானங்களை அந்த ஸ்வாமியே தெரிவிக்கவேணுமென்பதில்லை. அவரிடத்தில் பரிவுள்ளவர்களும் மற்றும் அந்தேவாஸிகளும் தெரிவிக்கலாம். ஸமாதானங்களை ஸ்ரீராமாநுஜன் மூலமாகவே வெளியிடவும் தடையில்லை; அபார்த்தங்களின் ப்ரசாரங்களை ஸஹித்திருக்கமாட்டாமையே இத்தகைய வெளியீடுகளுக்கு உண்மையான காரணமென்பதை விஜ்ஞாபித்து நிற்கின்றேன்.

தாஸன். ப்ர. அ.

# யாஜ்ஞவல்க்ய மஹோத்ஸவ விளம்பரம்

*பெரிய காஞ்சீபுரம் ராஜ வீதியிலுள்ள சுக்லயஜுர்வேத பாடசாலையில் 27—10—71 முதல் 5 நாள் ஸ்ரீ யாஜ்ஞவல்க்ய மஹோத்ஸவம் வழக்கம் போல் சிறப்பாக நடைபெறும். வைதிகர்கள் ஆனந்தமாக அநுபவிக்க வேண்டும்.* .... .... .... ....

# கண்ணாவும் அண்ணாவும் பேசியவை.

*(முன்னிதழ்த் தொடர்ச்சி)*

*கண்ணா*—அண்ணா! ஒரு கோபி என்னை நோக்கிச் சொல்லுகிறாள் "சொல்லாதொழியீர் சொன்னபோதினால்வாரீர்" என்று; இப்போது நான் அப்படியல்லாமல் உன்னிடம் சொல்லிப் போனபடியே இதோ வந்து சேர்ந்துவிட்டேன். இன்று உன்னோடு எத்தனை நாழிகை பேசினாலும் கேள்வியில்லை. மிக்க அவகாசத்தோடு வந்திருக்கிறேன். எவ்வளவும் பேசலாமின்று.

*அண்ணா*—கண்ணா! இப்போது மணவாளமாமுனிகளின் மஹோத்ஸவம் அற்புதமாக நடந்துகொண்டிருக்கிறது. இந்த பத்து நாளில் ஒரு பத்து நாழிகைகூட எனக்கு அவகாசம் (ஓய்வு) கிடைப்பதில்லை. இந்த ஸமயத்தில் நீ வந்திருக்கிறாய். நானோ ஸன்னிதிக்கு ஓடிக்கொண்டேயிருக்கிறேன். உன்னைவிட்டுப் போகவும் மனமில்லை. போகாமலிருக்கவும் முடியவில்லை; நீ என்ன சொல்லுகிறாய் கண்ணா?

*கண்ணா*—அங்குப்போய் நீ என்ன செய்கிறாய் சொல்லு; அதை நான் தெரிந்து கொண்டல்லவா பதில் சொல்ல வேண்டும்.

*அண்ணா*—அதை நான் சொல்லித் தெரிந்துகொள்வதிற்காட்டில் என்னோடுகூட நீயும் சற்றுவந்து "கட்கிலீ! உன்னைக் காணுமாறருளாய்" என்பாருடைய குறைதீர அவர்களுக்கும் காட்சிதந்து அங்கு நான் அநுபவிக்கிற விதங்களை நீ நேரில் பார்க்கவேணும் கண்ணா! எங்குப் போனாலும் உன் கதைகளை நினைந்து நைந்து உள்கரைந்துருகுவது தவிர வேறுண்டோ? வா, புறப்பட்டுப்போவோம். இன்று ஒன்பதாவது உத்ஸவம். ☼சிலையிலங்கு பொன்னாழி☼ என்று தொடங்கி "கண்ணபுரத்தம்மானைக் கண்டாள்கொலோ" என்பர்கள். ஆமாம் ஆமாம்; மெய்யே கண்டான், நான்தான் கண்ணபுரம் சௌரி, என்னைத்தான் கண்டாள் என்று நீ சொன்னால் எல்லார்க்கும் பேரின்ப வெள்ளம் பெருகும்.

*கண்ணா*—இன்று ஒன்பதாவது உத்ஸவமென்கிறாய். நாலாவது உத்ஸவத்தன்று காலை ஒரு திவ்யதேசம் சென்றேன்; அப்போது பெருமாள் திருமொழி ஸேவையாகிறது; நான் போகும்போது "இன்னமங்கே நட நம்பி நீயே" "இன்னமென்கையகத்தீங்கொரு நாள்வருதியேல் என்சினம் தீர்வன்நானே" என்றித்தகைய பாசுரங்கள் காதில் விழவே என்னாகுமோவென்று அஞ்சியோடிவிட்டேன். மறுபடியும் ஆறாவதுநாளிரவு சென்றேன்; அப்போது திருவாய்மொழியில் ☼மின்னிடை மடவார்கள் ஸேவையாகிறது; "என்னைமார் தன்மபாவமென்னார் ஒரு நான்று தடியிணக்கே" என்று காதில் விழுந்தது; தடியடிபட நம்மால் முடியாதென்று காற்றில் கடியனாய் ஓடி அகம்புக்குவிட்டேன். இப்போது நீ அழைக்கிறாய், இன்று என் செவியில் என்ன விழுமோ என்று அஞ்சுகிறேனண்ணா!

*அண்ணா*—நானிருக்கிறேன் அஞ்சாதே கண்ணா! இன்றிரவானால் "கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர்" என்று ஸேவிப்பார்கள். இப்போது காலை வேளை; தந்தைகாலில் விலங்கற வந்து தோன்றிய தோன்றல்பின், தமியேன் தன்சிந்தை போயிற்று" என்று நீயும் கண்ணீர் மல்க நிற்க ஸேவிப்பார்கள்; திருமஞ்சனத் திருச்சின்னவொலி கேட்டுவிட்டது, போகலாம் வா.

(தொடரும்)

# திருவயிந்திரபுரத்தில் மாமுனிகளின் மஹோத்ஸவம்.

தேவர்தானவர் சென்று சென்றிறைஞ்சும் தண்திருவயிந்திரபுரத்தில் அடியவர்க்கு மெய்யனுகிய தெய்வநாயகனுடைய திருவடிநிழலில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் மணவாளமாமுனிகளுக்குத் திருநக்ஷத்ர மஹோத்ஸவம் பத்துநாளும் வழக்கப்படி விசேஷ வைபவமாக நடைபெற்றது. ஸமீப காலத்தில் பெரிய திரு மண்டப நிர்மாணம் நிறைவேறி யிருப்பதால் விசேஷ கோஷ்டிகள் அநுபவிப்பதற்குப் பாங்கான ஸௌகரியம் ஏற்பட்டிருப் பது குறிப்பிடத்தக்கது. 21—10—71 வியாழக்கிழமை ஏழாந்திருநாளன்று அவ்விடத்தேறச் சென்று மாமுனிகளின் மஹோத்ஸவத்தைச் சிறிது அநுபவிக்க ப்ராப்தமாயிற்று. பொய்யிலாத மாமுனிகளின் பெருமைகளை அடியவர்க்கு மெய்யன் திருச்செவி சாத்தும்படி விஜ்ஞாபிக்க வாய்த்தது. அன்று அங்கு விஜ்ஞாபித்த பலபல விசேஷப் பொருள்களில் ஒன்றைமட்டும் இங்கு விஜ்ஞாபிக்கிறேன்.

உபதேசரத்தினமாலையில், ¤தன்குருவின் தாளிணைகள்தன்னில் அன்பொன்றில்லாதார், அன்பு தன்பால் செய்தாலும் அம்புயைகோன்—இன்பமிகு, விண்ணாடு தானளிக்க வேண்டி யிராறுதலால், நண்ணாரவர்கள் திருநாடு¤ என்கிற பாசுரம் மாமுனிகளின் திருவுள்ளத்தினுல் பொதுவான ஒருவகையான அர்த்தத்தையும், தத்பக்தர்களின் கருத்தினுல் விசேஷமானதொரு அர்த்தத்தையுங் கொண்டது. திருவாய்மொழியில் (2—2—3) ¤ஏறனைப் பூவனை¤ என்கிற பாசுரத்தின் ஈற்றடி "மாறனில்மிக்குமோர் தேவுமுளதே?" என்பதில் ஆழ்வார்திருவுள்ளத் தாலே *மால்தனில்* மிக்குமோர் தேவுமுளதே? என்றும், மதுர கவிகள் போல்வார் திருவுள்ளத் தாலே*மாறனில்மிக்கும்*—மாறனை குருகூர்ச்சடகோபனிற்காட்டிலும்... என்று பொருள் படுவது போலவே இங்கும் காண்க. அதன் விவரணம் கேளீர்.

ஆசார்யபக்தியற்றவர்கள் தன்னிடத்திலே [எம்பெருமானுகிற தன்னிடத்திலே] எவ் வளவு பக்திசெலுத்தினுலும் அவர்களுக்கு அப்பெருமான் முக்தியளிக்க விரும்ப மாட்டான் என்பது மாமுனிகள் திருவுள்ளம் பற்றிய பொருள். இப்பாசுரத்தில் எம்பெருமான் எழுவாய் ஆகையினுலே, *தன்குருவின்* என்பதற்கு அவன்தனக்கு ஆசாரியரானவரிடத்திலே என்று பொருள்படுவது ஸஹஜம். எம்பெருமான், தனக்கு ஈடளித்த மாமுனிகளுக்கு சிஷ்யனு யிருந்து தனியனிட்டவனுகையாலே, தன்குருவென்று மாமுனிகளை விவக்ஷித்து, அவர்திருவடி களில் பக்தியற்றவர்களாய் தன்பால் எவ்வளவு பக்தி செலுத்தினுலும் அவர்களிடத்து அநுக்ரஹாபிமுகனுக ஆகமாட்டான்; பகவத் பக்தர்கள் ஸ்ரீவரவரமுனிபக்திதரித்ரர்களானுல் அவர்களுக்கு ஒருநாளும் முக்திபெறவிரகில்லை என்றதாயிற்று. இப்பொருளை ஸ்ரீ தேவநாதன் திருச்செவி சாத்தி உகந்தருளினபடி.

அயிந்தை மாநகரமர்ந்த பெருமானும் அரங்க மாநகரமர்ந்த பெருமானும் ஒரேவ்யக்தி யாதலாலும், மேலேயெடுத்துக்காட்டிய உபதேசரத்தினமாலைப் பாசுரத்தில் *அம்புயைகோன்* என்பதற்குப் பொருளாக ஹேமாப்ஜநாயிகா நாயகனை தேவநாதனைக் கொள்வதற்கு ஔசித் யாதிசயமிருப்பதாலும் அந்த தேவநாதன் திருவடிவாரத்தில் விஜ்ஞாப்பித்த இப்பொருள் மிக்க சுவையுடைத்து. தேவநாதனடியார்கள் உய்யுமாறெண்ணி உகந்த பொருள் இது. ... ...